ஒல்லை உணரப்படும் - அகத்துச் செறுதலிலாதார் சொற் பிறபயத்தல் குறையுற்றாராற் கடிதி னறியப்படும்.

கடுஞ்சொல் லென்பது; இவ்விடங் காவன் மிகுதியுடைத்து, வரற்பாலி ரல்லிரென்றன்* முதலாயின. 'செறு' ரெனவே, அருளுடைமை பெறப்பட்டது. தன் குறை முடிக்கக்கருதியே சேட்படுக்கின்றமை குறிப்பா னறிந்து, உலகியன்மே லிட்டுக்கூறிய வாறு. இது வருகின்ற பாட்டிற்கு மொக்கும். (சு)

களகஎ. செறுஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறுஅர்போன் றுற்றார் குறிப்பு.

[இதுவுமது.]

(இ - ள்.) செறுஅச் சிறு சொல்லும் - பின்னினிதாய் முன் னின்னாதாய சொல்லும்; செற்றார்போல் நோக்கும் - அகத்துச் செறு திருந்தே புறத்துச் செற்றார்போன்ற வெகுளி நோக்கும்; உறுஅர் போன்று உற்றார் குறிப்பு - நொதுமலர் போன்ற நட்பாயினோர்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன.

'குறிப்பு' ஆகுபெயர். இவை உள்ளே யொருபயன் குறித்துச் செய்கின்றன; இயல்பல்ல வாகலான், இவற்றிற் கஞ்சவேண்டா வென்பதாம். (எ)

களகஅ. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள் பைய நகும்.

[தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக் கண்டு
தலைமகன் கூறியது.]

(இ - ள்.) யான் நோக்கப் பசையினள் பைய நகும்-என்னை யகற்றுகின்ற சொற்காற்று தியானிரந்து நோக்கியவழி அஃதறிந்து நெகிழ்ந்து உள்ளே மெல்ல நகாநின்றாள்; அசை இயற்கு ஆண்டு ஓ ரேர் உண்டு - அதனால் நுடங்கிய வியல்பினை யுடையாட்கு அந் நகையின்கண்ணே தோன்றுகின்றதோர் நன்மைக் குறிப்புண்டு.

'ஏர்' ஆகுபெயர். அக்குறிப்பு இனிப் பழுதாகாதென்பதாம். (அ)

களககூ. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

[தோழி மதியுடம்படுவா டன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) ஏதிலார்போலப் பொதுநோக்கு நோக்குதல் - முன் னறியாதார்போல ஒருவரை யொருவர் பொதுநோக்கத்தா னோக்கு

* திணைமொழியைம்பது - ௫.

தல்; காதலார் கண்ணே உள - இக்காதலையுடையார்கண்ணே யுள வாகாநின்றன.

'பொதுநோக்கு': யாவர்மாட்டும் ஒருதன்மைத்தாய நோக்கு. நோக்குதற்றொழில் ஒன்றேயாயினும் இருவர்கண்ணு நிகழ்தலானும், ஒருவர்கட்டானுங் குறிப்பு வேறுபாட்டாற் பலவாமாகலானும், 'உள' வெனப் பன்மையாற் கூறப்பட்டது. இருவரும் "மதுமறைந் துண் டோர் மகிழ்ச்சி போல, உள்ளத் துள்ளே மகிழ்"*தலின் அதுபற்றிக் 'காதலா' ரென்றும், அது புறந்து வெளிப்படாமையின் 'ஏதிலார் போல' வென்றுங் கூறினாள். (கூ)

ககoo. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனு மில.

[இதுவுமது]

(இ - ள்.) கண்ணொடு கண்ணிணை நோக்கு ஒக்கின் - காமத் திறகுரிய இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கா லொக்குமாயின்; வாய்ச்சொற்கள் என்ன பயனும் இல - அவர் வாய்மை தோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒரு பயனு முடையவல்ல.

நோக்கா லொத்தல் காத லொக்கின வாதல். 'வாய்ச்சொற் கள்': மனத்தின்கணின்றி வாயளவிற் றோன்றுகின்ற சொற்கள். இருவர் சொல்லுங் கேட்டு உலகியன்மேல்வைத்துக் கூறியவாறு. இருவர் சொல்லுமாவன அவள் புனங்காவன்மேலும் அவன் வேட் டத்தின்மேலுஞ் சொல்லுவன.† பயனில்சொற்களாகலின், இவை கொள்ளப்படா வென்பதாம். இவை புணர்தனிமித்தம். (கo)

---

## அ௧. ககக—புணர்ச்சிமகிழ்தல்

[அஃதாவது, அங்ஙனங் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப் புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகாரமுறைமையும் இத னானே விளங்கும்.]

ககoக. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யுள.

---

*"ஏனல் காவ லிவளு மல்லள்" என்ற பாட்டு; இதனை இறை யனா ரகப்பொருள், அ-ஆம் சூத்திரத்துரையிலும், தொல். பொருள். களவு, உங-ஆம் சூத்திரத்துரையிலுங் காண்க.

† திருக்கோவையார் - கூக.

[இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.]

(இ-ள்.) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனும் - கண்ணாற்கண்டும் செவியாற்கேட்டும் நாவாலுண்டும் மூக்கான் மோந்தும் மெய்யாற்றீண்டியும் அனுபவிக்கப்படு மைம் புலனும்; ஒண்டொடி கண்ணே உள - இவ்வொள்ளிய தொடியை யுடையாள்கண்ணே யுளவாயின.

உம்மை முற்றும்மை. தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கி நின்றது. வேறுவேறு காலங்களில் வேறுவேறு பொருள்களானனு பவிக்கப்படுவன ஒருகாலத்து இவள்கண்ணே யனுபவிக்கப்பட்டன வென்பதாம். வடநூலார் இடக்கர்ப்பொருளளவாகச் சொல்லிய புணர்ச்சித் தொழில்களும் ஈண்டடக்கிக் கூறப்பட்டன. (க)

கக0உ. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

[இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.]

(இ-ள்.) பிணிக்கு மருந்து பிற - வாத முதலிய பிணிகட்கு மருந்தாவன அவற்றிற்கு நிதான* மாயினவன்றி மாறாய வியல்பினை யுடையனவாம்; அணி யிழை தன் நோய்க்கு மருந்து தானே - அவ்வாறன்றி இவ்வணியிழையினை யுடையாள் தன்னினாய பிணிக்கு மருந்துந் தானேயாயினாள்.

இயற்கைப்புணர்ச்சியை நினைந்து முன் வருந்தினானாகலிற் 'றன்னோ' யென்றும், அவ்வருத்தந் தமியாளை யிடத்தெதிர்ப்பட்டுத் தீர்ந்தானாகலிற் 'றானேமருந்' தென்றுங் கூறினான். இப்பிணியும் எளியவாயவற்றாற் றீரப்பெற்றில மென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. (உ)

கக0ங. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
றாமரைக் கண்ணா னுலகு.

[நிரதிசயவின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற் கின்னையாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.]

(இ-ள்.) தாம் வீழ்வார் மென்றோட் டுயிலின் இனிதுகொல் - ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம் விரும்பு மகளிர் மெல்லிய தோளின்கட் டுயிலுந் துயில்போல வருந்தாம லெய்தலாமோ; தாமரைக்கண்ணான் உலகு - அவற்றைத் துறந்த தவயோகிக ளெய்துஞ் செங்கண்மா லுலகம்?

---

* கூசஅ - ஆம் குறளுரை.

ஐம்புலன்களையு நுகர்வா ரென்னும்: பெயர் அவாய்நிலையான் வந்தது. இப்பெற்றித்தாய துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்த வேண்டுதலின், எம்மனோர்க்காகா தென்னுங் கருத்தால் 'இனிதுகொ' லென்றான். இந்திரனுலகென் றுரைப்பாரு முளர்.* 'தாமரைக் கண்ணா' னென்பது அவனுக்குப் பெயரன்மையின், அஃதுரை யன்மை யறிக. (ந)

கக0௪. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்றா ளிவள்.

[பாங்கற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.]

(இ - ள்.) நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ - தன்னை யகன்றுழிச் சுடாநிற்கும், அணுகுழிக் குளிராநிற்கும், இப்பெற்றித்தாய தீயை; இவள் யாண்டுப் பெற்றாள் - என்கட் டரு தற்கு இவ ளெவ்வுலகத்துப் பெற்றாள்?

கூடாமுன் றன்புறுதலின் 'நீங்கிற் றெறூஉ' மென்றும், கூடிய பின் னின்புறுதலிற் 'குறுகுங்காற் றண்ணென்னு' மென்றும், இப் பெற்றியதோர் தீ உலகத் தில்லையா மாகலின் 'யாண்டுப் பெற்றா' ளென்றுங் கூறினான். தன் காமத்தீத்தன்னையே அவடந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின். (௪)

கக0௫. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்.†

[தோழியிற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது.]

(இ - ள்.) வேட்ட பொழுதின் அவையவை போலுமே - மிக வினியவாய பொருள்களைப் பெறாது அவற்றின்மேல் விருப்பங் கூர்ந்தபொழுதின்கண் அவையவை தாமேவந் தின்பஞ் செய்யுமாறு போல் இன்பஞ் செய்யும்; தோட்டார் கதுப்பினாள் தோள் - எப்பொழு தும் பெற்றுப் புணரினும், பூவினை யணிந்த தழைந்த கூந்தலினை யுடையா டோள்கள்.

தோடு ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங் கற்கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ் வாராமைபற்றி இவ்வாறு கூறினான். தொழிலுவமம். (௫)

* மணக்குடவர்.　　† திருக்கோவையார்-க.

கக0சு. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

[இதுவுமது.]

(இ - ள்.) உயிர் உறுதோறு தளிர்ப்பத் தீண்டலால்-தன்னைப் பெறாது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறுந் தளிர்க்கும் வகை தீண்டுதலான்; பேதைக்குத் தோள் அமிழ்தின் இயன்றன - இப் பேதைக்குத் தோள்கள் தீண்டப்படுவதோ ரமிழ்தினாற் செய்யப் பட்டன.

ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்கு மெய்திற்று. வாடிய வுயிரைத் தளிர்ப்பித்தல் பற்றி, அவை 'யமிழ்தி னியன்றன' வென்றான். தளிர்த்தல்: இன்பத்தாற் றழைத்தல். (சு)

கக0எ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

[இவளை நீ வரைந்துகொண்டு உலகோர் தம்மில்லிருந்து தமது பூாத்துண்ணு மில்லறத்தோடு படல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அம் மா அரிவை முயக்கு-அழகிய மாமை நிறத்தை யுடைய அரிவையது முயக்கம்; தம்மில் இருந்து தமது பாத்து உண்டற்று - இன்பம் பயத்தற்கட் டமக்குரிய இல்லின்கணிருந்து உலகோர் தந் தாளான் வந்த பொருளைத் தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல்கட்குப் பகுத்துத்* தம் கூற்றையுண்டாற்போலும்.

தொழிலுவமம். இல்லறஞ் செய்தா ரெய்துந் துறக்கத்தின்பம் எனக் கிப் புணர்ச்சியே தருமென வரைவுடன்படான் கூறியவாறாயிற்று. (எ)

கக0அ. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு.

[ஒத்த அன்புடைய நமக்கு ஒருபொழுதும் விடாத முயக்கமே இனியதென வரைவுகடாய தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) (நீ சொல்லுகின்ற தொக்கும்;) வளி இடை போழப் படா முயக்கு - ஒருபொழுதீ நெகிழாமையிற் காற்றுவிடை யறுக்கப் படாத முயக்கம்; வீழும் இருவர்க்கு இனிதே - ஒருவரை யொருவர் விழைவா ரிருவர்க்கு மினிதே.

---

*. சநூ - ஆம் குறள் உரை.

முற்றும்மை விகாரந்தாற் றொக்கது. ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது. ஈண்டு இருவரில்லை; இன்மையான் இஃது தொவ்வா தென்பது கருத்து. களவிற் புணர்ச்சியை மகிழ்ந்து வரைவுடன் படான் கூறியவாறு. (அ)

கக0சு. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

[கரத்தல் வேண்டாமையின் இடையறவில்லாத கூட்டமே இன்பப்பயனுடைத்தென வரைவுகடாவியாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) ஊடல் உணர்தல் புணர்தல் இவை - புணர்ச்சி யினி தாதற்பொருட்டு வேண்டுவதாய ஊடலும், அதனை யளவறிந்து நீங்கு தலும், அதன்பி னிகழ்வதாய அப் புணர்ச்சிதானுமென இவ்வ யன்றே; காமம் கூடியார் பெற்ற பயன்-வரைந்துகொண்டு காமத்தை யிடைவிடா தெய்தியவர் பெற்ற பயன்கள்.

ஆடவர்க்குப் பிரிவென்பதொன் றுளதாதன்மேலும், அதுதான் பரத்தையர்மாட் டாதலும் அதனை யறிந்து மகளி ரூடிநிற்றலும் அவ் வூடலைத் தவறு செய்தவர் தாமே தந் தவறின்மை கூறி நீக்கலும் பின்னு மவ் விருவரும், ஒத்த வன்பினராய்க் கூடலுமன்றே முன் வரைந்தெய்தினர் பெற்ற பயன்; அப்பயன், இருதலைப்புள்ளி னோருயி ராய உழுவலன்புடைய வெமக்கு வேண்டாவென அவ் வரைந்தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு. (கூ)

கககo. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

[புணர்ந்துடன் போகின்றான் றன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) அறிதோறு அறியாமை கண்டற்று - நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை யறிய வறிய முன்னை யறியாமை கண்டாற்போலக் காணப்படாநின்றது; சேயிழை மாட்டுச் செறி தோறும் காமம் - சிவந்த விழையினை யுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவண் மாட்டுக் காதல்.

களவொழுக்கத்திற் பல விடையீடுகளா னெய்தப்பெறாது அவா வுற்றான் இதுபொழுது நிரந்தரமாக வெய்தப் பெற்றமையின், 'செறிதோறு' மென்றான். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மே லறிய வறிய முன்னை யறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச் செறிவு செறியாமையாய் முடியாநின்றதெனத் தன்னுராமை

கூறியவாறு. இப் புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கு முண்டேனும் அவண்மீட்டுக் குறிப்பா னிகழ்வதல்லது கூற்றா னிகழாமை யறிக. (கப)

---

## அதி. ககஉ—நலம்புனைந்துரைத்தல்

[அஃதாவது, தலைமகன் றலைமக ணலத்தைப் புனைந்து சொல்லியது. இது புணர்ச்சிமகிழ்ந்தழி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்த லின்பின் வைக்கப்பட்டது.]

ககக. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

[இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.]

(இ - ள்.) அனிச்சமே வாழி நன்னீரை-அனிச்சப்பூவே, வாழ் வாயாக! மென்மையால் நீ யெல்லாப்பூவினு நல்ல வியற்கையை யுடையை; யாம் வீழ்பவள் நின்னினும் மென்னீரள் - அங்ஙனமாயி னும், எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினு மெல்லிய வியற்கையை யுடையள்.

அனிச்சம் ஆகுபெயர். 'வாழி' யென்பது உடன்பாட்டுக் குறிப்பு. இனி யானே மெல்லியனென்னுந் தருக்கினை யொழிவாயாக வென்ப தாம். அதுபொழு துற்றறிந்தானாகலின், ஊற்றினினிமையையே பாராட்டினான். இன்னீரளென்று பாடமோதுவாரு முளர். (க)

ககஉ. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

[இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே! இவள் கண் பலர் காணும் பூ ஒக்கும் என்று - யானே காணப்பெற்ற இவள் கண்களைப் பல ராலுங் காணப்படும் பூக்கள் ஒக்குமென்று கருதி: மலர்காணின் மையாத்தி - தாமரை, குவளை, நீல முதலிய மலர்களைக் கண்டால் மயங்கா நின்றாய்; நின்னறி விருந்தவா றென்!

மையாத்தல் ஈண்டு ஒவ்வாதவற்றை யொக்குமென்க்கோடல். இறுமாத்தல், செம்மாத்த லென்பனபோல வொருசொல். இயற் கைப்புணர்ச்சி நீக்க முதலாகத் தலைமகள் கண்களைக் காணப் பெறாமையின் அவற்றோ டொருபுடை யொக்கு மலர்களைக் கண்டுழி யெல்லாம் அவற்றின்கட் காதல்செய்து போந்தான், இதுபொழுது

அக்கண்களி னலமுழுதுந் தானே தமியாளின் யிடத்தெதிர்ப்பட் டனு பவித்தானாகலின் அம்மலர்கள் ஒவ்வாமை கண்டு ஒப்புமை கருதிய நெஞ்சை யிகழ்ந்து கூறியவாறு. (௨)

௧௧௧௩. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

[கூட்டுதலுற்ற பாங்கற்குத் தலைமகன் றலைமகள தியல்பு கூறியது.]

(இ - ள்.) வேய்த்தோ ளவட்கு - வேய்போலுந் தோளினை யுடையவட்கு; மேனி முறி - நிறந் தளிர்நிறமாயிருக்கும்; முறு வல் முத்தம் - பல்லு முத்தமாயிருக்கும்; நாற்றம் வெறி - இயல் பாய நாற்றம் நறுநாற்றமாயிருக்கும்; உண்கண் வேல் - உண் கண்கள் வேலாயிருக்கும்.

பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது. 'முறி' 'முறுவ' லென்பன ஆகுபெயர். உருவகவகையாற் கூறினமையின், புனைந் துரையாயிற்று. நின்னாற் கருதப்பட்டாளை யறியே னென்று சேட் படுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியதூஉமாம். (௩)

௧௧௧௪ காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

[பாங்கற்கூட்டத்துச்சென்று சார்தலுறுவான் சொல்லியது.]

(இ - ள்.) குவளை - குவளைப்பூக்கடாமும்; காணின் - காண் டற்றொழிலை யுடையவாயின்; மாண் இழை கண் ஒவ்வேம் என்று கவிழ்ந்து நிலன் நோக்கும் - மாண்ட விழையினையுடையாள் கண் களை யாமொவ்வேமென்று கருதி அந்நாணினா லிறைஞ்சி நிலத்தினை நோக்கும்.

பண்பானேயன்றித் தொழிலானு மொவ்வாதென்பான் 'காணி' னென்றும், கண்டால் அவ்வொவ்வாமையால் நாணுடைத்தா மென்பது தோன்றக் 'கவிழ்ந்' தென்றுங் கூறினான். காட்சியு நாணு மின்மையிற் செம்மாந்து வானை நோக்கின வென்பதாம் (௪)

௧௧௧௫. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.

[பகற்குறிக்கட் பூவணி கண்டு சொல்லியது.]

(இ - ள்.) அனிச்சப்பூக் கால் களையாள் பெய்தாள் - இவள் தன் மென்மை கருதாது அனிச்சப்பூவை முகிழ் களையாது சூடினாள்; நுசுப்பிற்கு நல்ல பறை படா - இனி யிவளிடைக்கு நல்ல பறைக ளொலியா.

அம் முகிழ்ப்பாரம்: பொறாமையின் இடை முரியும்; முரிந்தால் அதற்குச் செத்தார்க்குரிய நெய்தற்பறையே படுவதென்பதாம். மக்கட்குரிய சாக்காடும் பறைபடுதலும் இலக்கணைக்குறிப்பால் நுசுப்பின்மேலேற்றப்பட்டன. (ரு)

ககககூ. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

[இரவுக்குறிக்கண் மதிகண்டு சொல்லியது.]

(இ - ள்.) மீன் - வானத்து மீன்கள்; மதியும் மடந்தை முகனும் அறியா - வேறுபாடு பெரிதாகவும் தம் மதியினையும் எம் மடந்தை முகத்தினையும் இது மதி இது முகமென் றறியமாட்டாது; பதியின் கலங்கிய - தந்நிலையினின்றுங் கலங்கித் திரியாநின்றன.

ஓரிடத்து நில்லாது எப்பொழுது மியங்குதல்பற்றிப் 'பதியிற் கலங்கிய' வென்றான். வேறுபாடு வுருகின்ற பாட்டாற் பெறப்படும். இனி இரண்டனையும் பதியிற் கலங்காத மீன்களறியுமல்லது கலங்கின மீன்கள் அறியாவென் றுரைப்பினு மமையும். (சு)

ககக௭. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) (அம்மீன்கள் அங்ஙனங் கலங்குதற்குக் காரணம் யாது?) அறுவாய் நிறைந்த அவிர் மதிக்குப்போல - முன் குறைந்தவிடம் வந்து நிரம்பியே விளங்கு மதிக்கட்போல; மாதர் முகத்து மறு உண்டோ - இம் மாதர் முகத்து மறுவுண்டோ?

இடம் - கலை. 'மதிக்' கென்பது வேற்றுமைமயக்கம். தேய்தலும் வளர்தலும் மறுவுடைமையு மின்மைபற்றி வேறுபாடறியலாயிருக்க அறிந்தில வென விகழ்ந்து கூறியவாறு. (௭)

ககக௮. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

[இதுவு மது.]

(இ - ள்.) மதி வாழி - மதியே, வாழ்வாயாக! மாதர் முகம் போல் ஒளிவிட வல்லையேல் காதலை - இம்மாதர் முகம்போல யான் மகிழும் வகை ஒளிவீச வல்லையாயின், நீயு மென் காதலை யுடையையாதி.

மறுவுடைமையின் அதுமாட்டாய்; மாட்டாமையின் என்னாற் காதலிக்கவும்படா யென்பதாம். 'வாழி' யென்பது இகழ்ச்சிக்குறிப்பு.

கககக. மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றன் மதி.

[இதுவு மது.]

(இ - ள்.) மதி - மதியே; மலர் அன்ன கண்ணாள் முகம் ஒத்தியாயின் - இம்மலர்போலுங் கண்ணினையுடையாண் முகத்தை நீ யொக்க வேண்டுதியாயின்; பலர் காணத் தோன்றல் - இதுபோல யான் காணத் தோன்று; பலர் காணத் தோன்றாதொழி.

தானே முகத்தி னலமுழுதும் கண்டனுபவித்தானாகலின் ஈண்டுப் பலர் காணத் தோன்றலை யிழித்துக் கூறினான். தோன்றின் நினக் கவ்வொப் புண்டாகா தென்பதாம். (க)

ககஉ0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

[உடன்போக் குரைத்த தோழிக்கு அதனருமைகூறி மறுத்தது.]

(இ - ள்.) அனிச்சமும் அன்னத்தின் தூவியும் - உலகத்தாரான் மென்மைக் கெடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப் புள்ளின் சிறகுமாகிய விரண்டும்; மாதர் அடிக்கு நெருஞ்சிப் பழம் - மாதரடிக்கு நெருஞ்சிப்பழம்போல வருத்தஞ்செய்யும்.

முள் வலிதாதலுடைமையிற் 'பழ' மென்றான். இத்தன்மைத்தாயவடி "பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கற்" *களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனங் கடக்குமென்பது குறிப்பாற் பெறப் பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப்பொருளும் அடிநல னழியாமையாகலின், இதுவு மிவ்வதிகாரத்ததாயிற்று. (க0)

---

## அகி. ககங—காதற்சிறப்புரைத்தல்

[அஃதாவது, தலைமகன் தன் காதன்மிகுதி கூறலும், தலைமகள் தன் காதன்மிகுதி கூறலுமாம். இது புணர்ச்சியும் நலனும்பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சிமகிழ்தல், நலம்புனைந்துரைத்தல் களின் பின் வைக்கப்பட்டது.]

---

* அகநானூறு, களிற்றியானைநிரை - ரு.

கக௨க. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

[இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கட் டலைமகன் றன்னயப்புணர்த்தியது.]

(இ - ள்,) பணிமொழி வால் எயிறு ஊறிய நீர் - இம்மெல்லிய மொழியினையுடையாளது வாலிய வெயிறூறிய நீர்; பாலொடு தேன் கலந் தற்று - பாலுடனே தேனைக் கலந்த கலவைபோலும்.

கலந்தற்றென்பது விகாரமாயிற்று; கலக்கப்பட்டதென்றவாறு. 'பாலொடு தே' னென்றவதனால் அதன் சுவைபோலுஞ் சுவையினை யுடைத்தென்பதாயிற்று. 'எயிறூறிய' வென இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. வேறு வேறறியப்பட்ட சுவையவாய பாலுந் தேனுங் கலந்தழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தாமாதலின், அது பொருளாகிய நீர்க்கு மெய்துவிக்க. (க)

கக௨௨. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

[பிரிவச்சங் கூறியது.]

(இ - ள்.) உடம்பொடு உயிரிடை என்ன அன்ன - உடம்பொடுயிரிடையுளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய; மடந்தையொடு எம்மிடை நட்பு - இம்மடந்தையோடு எம்மிடையுளவாய நட்புக்கள்.

என்னவெனப் பன்மையாற் கூறியது, இரண்டுந் தொன்று தொட்டு வேற்றுமையின்றிக் கலந்து வருதல், இன்பத்துன்பங்களொக்க வனுபவித்தல், இன்றியமையாமையென் றிவற்றை நோக்கி தெய்வப்புணர்ச்சியாகலான் அதுபொழுது உணர்ச்சி யிலளாகியாள் பின்னுடையளாமன்றே; ஆயவழி, இவன் யாவன்கொலெனவும், என்கணன்புடையன்கொலெனவும், இன்னு மிவனைத் தலைப்பெய்தல் கூடுங்கொலெனவும் அவண்மனத்தின்கணிகழும்; அந்நிகழ்வனவற்றைக் குறிப்பானறிந்து அவை தீரக் கூறியவாறு. என்னையென்று பாடமோதுவாரு முளர். (உ)

கக௨௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்

[இடந்தலைப்பாட்டின்கட் டலைமக னீக்கத்துச் சொல்லியது.]

(இ - ள்.) கருமணியிற் பாவாய் நீ போதாய் - என் கண்ணிற் கருமணியின்கணுறையும் பாவாய், நீ யங்குநின்றும் போதரு

வாயாக; யாம் வீழும் திருநுதற்கு இடம் இல்லை - போகராதிருத்தி யாயின், எம்மால் விரும்பப்பட்ட திருநுதலையுடையாட்கு இருக்க விடமில்லையாம்.

யான் காணு தமையாமையின், இவள் புறத்துப்போகற்பால ளன்றி என்கண்ணு ளிருக்கற்பாலள்; இருக்குங்கால் நின்னே டொருங்கிருக்க இடம் போதாமையின் நின்னினுஞ் சிறந்த இவட்கு அவ்விடத்தைக்கொடுத்து நீ போதுவாயாக வென்பதாம். (௩)

ககஉச. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

[பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான் சொல்லியது.]

(இ - ள்.) ஆயிழை உயிர்க்கு வாழ்தல் அன்னள் - தெரிந்த இழையினையுடையாள் எனக்குப் புணருமிடத்து உயிர்க்குடம்போடு கூடிவாழ்தல்போலும்; நீங்குமிடத்து அதற்குச் சாதல் அன்னள் - பிரியுமிடத்து அதற்கு அதனினீங்கிப் போதல்போலும்.

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய்நிலையான் வந்தன. வாழுங்காலத்து வேற்றுமையின்றி வழிநிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ்செய்தலானும், அவற்றை அவள் புணர்வு பிரிவுகட் குவமை யாக்கினான். (௪)

ககஉ௫. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்.

[ஒருவழித்தணந்துவந்த தலைமகன் நீயிர் தணந்தஞான்று எம்மை யுள்ளியு மறிதிரோ வென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) ஒள்ளமர்க் கண்ணாள் குணம் யான் மறப்பின் உள்ளுவன் - ஒள்ளியவாய் அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன்; மறப்பு அறியேன் - ஒருபொழுதும் மறத்தலையறியேன்; ஆகலான் நினைத்தலையு மறியேன்.

'மன்' ஒழியிசைக்கண் வந்தது. குணங்கள்: நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன் கூற்று; மேற் றலைமகள் கூற்று. (௫)

ககஉசா. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
நுண்ணியரெங் காத லவர்.

[ஒருவழித்தணப்பின்கட் டலைமகளைத் தோழி இயற்பழிக்குமென்றஞ்சி அவள் கேட்பத் தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) (தாங் காணாமைபற்றிச் சேய்மைக்கட் போயினா ரென்று கருதுவார் கருதுக) எங் காதலவர் கண்ணுள்ளிற் போகார்-

எம்முடைய காதலர் எம் கண்ணகத்து நின்றும் போகார்; இமைப்பிற் பருவரார் - யாமறியா திமைத்தோமாயின் அதனால் வருந்துவதுஞ் செய்யார்; நுண்ணியர் - ஆதலாற் காணப்படா நுண்ணியர்.

இடைவிடாத நினைவின் முதிர்ச்சியான் எப்பொழுதும் முன்னே தோன்றலிற் 'கண்ணுள்ளிற் போகா' ரென்றும், இமைத்துழியும் அது நிற்றலான் 'இமைப்பிற் பருவரா' ரென்றுங் கூறினாள். (சு)

ககஉஎ. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
மெழுதேங் கரப்பாக் கறிந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காதலவர் கண் உள்ளாராகக் கண்ணும் எழுதேம் - காதலர் எப்பொழுது மெங் கண்ணி னுள்ளாராகலாற் கண்ணினை அஞ்சனத்தா லெழுதுவதுஞ் செய்யேம்; கரப்பாக்கு அறிந்து - அத்துணைக்காலமும் அவர் மறைதலை யறிந்து.

இழிவுசிறப்பும்மை மாற்றப்பட்டது. 'கரப்பாக்' கென்பது வினைப்பெயர்; வருகின்ற 'வேபாக்' கென்பது மது. யானிடையீடின்றித் தூங்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமா றென்னை யென்பது குறிப்பெச்சம். (எ)

ககஉஅ. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
லஞ்சுதும் வேபாக் கறிந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காதலவர் நெஞ்சத்தா ராக வெய்து உண்டல் அஞ்சுதும் - காதலர் எங்நெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலை யஞ்சாநின்றேம்; வேபாக்கு அறிந்து - அவர் அதனான் வெய்துறலை யறிந்து.

எப்பொழுதும் எங்நெஞ்சின்க ணிருக்கின்றவரைப் பிரிந்தா ரென்று கருதுமா றென்னையென்பது குறிப்பெச்சம். (அ)

ககஉகூ. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
யேதில ரென்னுமிவ் வூர்.

[வரைவிடை வைத்துப் பிரிவின்கட் டலைமக ளாற்றுதற் பொருட்டுத் தோழி தலைமகனை யியற்பழித்தவழி அவளியற்பட மொழிந்தது.]

(இ - ள்.) இமைப்பிற் கரப்பாக்கு அறிவல் - என் கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து

இமையேன் ; அனைத்திற்கே ஏதிலர் என்னும் இவ்வூர் - அவ்வள விற்கு அவரைத் துயிலாநோய் செய்தார் அன்பிலரென்று சொல்லா நிற்கும் இவ்வூர்.

தன் கருத்தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூ' ரென்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தா ரென்று பழிக்கற்பாலையல்லை யென்பதாம். ()

ககஙo. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்.

[இதுவு மது.]

(இ - ள்.) என்றும் உள்ளத்துள் உவந்து உறைவர் - காதலர் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே யுவந்துறையாநிற்பர்; இகந்து உறைவர் ஏதிலர் என்னும் இவ்வூர் - அதனை யறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர்.

'உவந்துறைவ' ரென்றதனால் அன்புடைமை கூறினாள். பிரியாமையும் அன்பு முடையாரை இலரெனப் பழிக்கற்பாலையல்லை யென்பதாம். (கo)

---

# அதி. ககச—நாணுத்துறவுரைத்தல்

[அஃதாவது, சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் தோழிக்குத் தன் னாணுதுறவுரைத்தலும், அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் அவட்குத் தன் னாணுதுறவுரைத்தலுமாம். இது, காதல் மிக்குழி நிகழ்வதாகலின், காதற்சிறப்புரைத்தலின் பின் வைக்கப்பட்டது.]

ககஙக. காம முழந்து வருந்தினார்க் கேம
மடலல்ல தில்லை வலி.

[சேட்படுக்கப்பட்டு ஆற்றானாய தலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) காமம் உழந்து வருந்தினார்க்கு - அரியராய மகளிரோடு காமத்தை யனுபவித்துப் பின் னதுபெறாது துன்புற்ற வாடவர்க்கு; ஏம மடல் அல்லது வலி இல்லை - பண்டும் ஏமமாய் வருகின்ற மடலல்லது இனி யெனக்கு வலியாவதில்லை.

ஏமமாதல் அத்துன்ப நீங்கும் வகை அவ்வனுபவத்தினை கொடுத்தல். 'வலி' ஆகுபெயர். பண்டு மாடவராயினார் இன்ப மெய்தி வருகின்றவாறு நிற்க, நின்னை யதற்குத் துணையென்று

கருதிக் கொன்னே முயன்ற யான் இதுபொழுது அல்லாமையை யறிந்தேனாகலான், இனி யானு மவ்வாற்றான் அதனை யெய்துவ லென்பது கருத்து. (க)

கககூஉ. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.

[நாணுடைய நமக்கு அது முடியாதென மடல்விலக்க லுற்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நோனா உடம்பும் உயிரும் மடல் ஏறும் - அவ்வருத் தத்தினைப்பொறாத வுடம்பு முயிரும் அதற்கேமமாய மடன் மாவினை யூரக் கருதாநின்றன ; நாணினை நீக்கிநிறுத்து - அதனை விலக்குவ தாய நாணினை யகற்றி.

"வருந்தினார்க்"கென மேல்வந்தமையிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூறாராயினர். 'மடல்' ஆகுபெயர். 'நீக்கிநிறுத்' தென்பது ஒருசொன்னீர்மைத்து. அறிவு நிறை யோர்ப்புக் கடைப்பிடி முதலிய முன்னே நீங்கவும் நாணீங்காது நின்றது ; அதுவு மிதுபொழுது நீங்கிற்றென்பான், 'உடம்பு முயிரு' மென்றான். அவைதாந் தம்மு ணீங்காமற்பொருட்டு மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமை யறிந்து கடிதிற் குறைநேர்தனோக்கி. (உ)

கககூகூ. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

[நாணையன்றி நல்லாண்மையு முடைமையின் முடியாதென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை பண்டு உடையேன்-நாணும் மிக்க வாண்டகைமையும் யான் பண்டுடையேன் ; காமுற்றார் ஏறும் மடல் இன்று உடையேன் - அவை காமத்தா னீங்குதலான், அக்காம மிக்கா ரேறும் மடலினை யின்றுடையேன்.

நாண் : இழிவாயின செய்தற்கண் விலக்குவது. ஆண்மை : ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன ; இன்றுள்ளது இதுவேயாகலிற் கடிதின் முடியு மென்பதாம். (கூ)

கககூச. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

[நாணு நல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் அதனால் அவை நீங்குவனவல்ல வென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) நாணொடு நல்லாண்மை என்னும் புணை - யான் றன்னைக் கடத்தற்குக்கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய

புணைகளை ; காமக் கடும்புனல் உய்க்குமே - என்னிற் பிரிந்துக் காமமாகிய கடிய புனல் கொண்டுபோகா நின்றது.

அது செய்யமாட்டாத ஏனைப்புனலி னீக்குதற்குக் 'கடும்புன' லென்றான். இப் புனற்கு அவை புணையாகா; அதனான் அவை நீங்கு மென்பதாம். (ச)

ககஙரு. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.

[இவ்வாற்றாமையும் மடலும் நுமக் கெவ்வாறு வந்தன வென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) மாலை உழக்கும் துயர் மடலொடு - மாலைப்பொழுதின்க ணனுபவிக்குந் துயரினையும் அதற்கு மருந்தாய மடலினையும் முன்னறியேன்; தொடலைக் குறுந்தொடி தந்தாள் - இதுபொழுது எனக்கு மாலைபோலத் தொடர்ந்த சிறுவளையினை யுடையாடந்தாள்.

காமம் ஏனைப்பொழுதுகளினு முளதேனும் மாலைக்கண் மலர்தலுடைமையின்* 'மாலையுழக்குந்துய' ரென்றும், மடலும் அதுபற்றி வந்ததாகலின் அவ்விழிவும் அவளாற் றரப்பட்டதென்றும், அவடான் நீ கூறியதே கூறு மிளமையளென்பது தோன்றத் 'தொடலைக் குறுந்தொடி' யென்றுங் கூறினான். அப்பெயர் உவமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. இவை அவடந்தனவாகலின் நின்னு னீங்கு மென்பது கருத்து. (ரு)

ககஙசு. மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.

[மடலூரும்பொழுது இற்றைக்குங் கழிந்ததென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) பேதைக்கு என் கண் படல் ஒல்லா - நின் பேதை காரணமாக என் கண்கள் ஒருகாலுந் துயிறலைப் பொருந்தா ; யாமத்தும் மன்ற மடலூர்தல் உள்ளுவேன் - அதனால் எல்லாருந் துயிலுமிடை யாமத்தும் யானிருந்து மடலூர்தலையே கருதா நிற்பேன்.

'பேதை' யென்றது பருவம்பற்றியன்று, மடமைபற்றி. இனிக் குறைமுடிப்பது நாளையென வேண்டா வென்பதாம். (சு)

ககஙஎ. கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

* குறள் - கஉஉஎ.

[பேதைக் கென்கண் படலொல்லா வென்பதுபற்றி அறிவிலராய
மகளிரினும் அஃறிலடையராய வாடவரன்றே ஆற்றற்பால
ரென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) கடல் அன்ன காமம் உழந்தும் மடல் ஏறாப் பெண்ணின் - கடல்போலக் கரையற்ற காமநோயினை யனுபவித்தும் மடலூர்தலைச் செய்யாது ஆற்றியிருக்கும் பெண்பிறப்புப்போல; பெருந் தக்கது இல் - மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்தில்லை.

பிறப்புவிசேடத்தால் அவ்வடக்கம் எனக்கில்லையாகாநின்றது; நீ யஃதறிகின்றிலை யென்பதாம். இத்துணையுந் தலைமகன் கூற்று: மேற் றலைமகள் கூற்று. (எ)

ககஙஅ. நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

[காப்புச் சிறைமிக்குக் காமம் பெருகியவழிச் சொல்லியது.]

(இ - ள்.) நிறை அரியர் (என்னாது)-இவர் நிறையால் நாமீதூர்தற் கரியரென் றஞ்சுதல் செய்யாது; மன் அளியர் என்னாது - மிகவு மளிக்கத்தக்காரென் றிரங்குதல் செய்யாது; காமம் மறை இறந்து மன்று படும் - மகளிர் காமமும் அவர் மறைத்தலைக் கடந்து மன்றின் கண்ணே வெளிப்படுவதாயிருந்தது.

'என்னா' தென்பது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கப்பட்டது. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. 'மன்' றென்பது தந்தை தன்னையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார் காமத்தியல்பு கூறுவாள்போன்று, தன் காமம் பெருகியவாறும் இனி யறத்தொடு நிற்றல்வேண்டு மென்பதும் குறிப்பாற் கூறியவாறாயிற்று. (அ)

ககஙகூ. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காம
மறுகின் மறுகு மருண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) எல்லாரும் அறிகிலார் என்று - யான் முன்னடங்கி நிற்றலான் எல்லாரு மென்னை யறிதலிலர், இனி யவ்வாறு நில்லாதியானே வெளிப்பட்டறிவிப்பலென்று கருதி; என் காமம் மறுகில் மருண்டு மறுகும் - என் காமம் இவ்வூர் மறுகின்கண்ணே மயங்கிச் சுழலாநின்றது.

மயங்குதல்: அம்பலாதல்; மறுகுதல்: அலராதல். அம்புலு மலருமாயிற்று, இனி யறத்தொடுநிற்றல்வேண்டு மென்பதாம். அறிவிலாரென்பதூஉம் பாடம். (கூ)

ககசம. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு.

[செவிலிக் கறத்தொடு நின்றுவைத்து யாணிற்குமாறென்னை யென்று நகையாடிய தோழியொடு புலந்து தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) யாம் கண்ணிற் காண அறிவில்லார் நகுப - யாங் கேட்குமாறு மன்றிக் கண்ணாற் காணுமாறு எம்மை யறிவிலார் நகா நின்றார்; யாம் பட்ட தாம் படா வாறு - அவரங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான்.

'கண்ணி' னென்றது முன் கண்டறியாமை யுணரநின்றது. அறத்தொடு நின்றமை யறியாது வரைவு மாட்சிமைப்படுகின்றில னெனப் புலக்கின்றாளாகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். இது, நகாநின்று சேட்படுக்குந் தோழிக்குத் தலைமகன் கூறியதாங்கால், அதிகாரத்திற் கேலாமை யறிக. (கம)

---

## அதி. ககரு—அலரறிவுறுத்தல்.

[அஃதாவது, களவொழுக்கம் வேண்டிய தலைமகள் பிறர் கூறுகின்ற வலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக்கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்று வேண்டிய தலைமகளும் தோழியும் அவ்வலரை யவன்றனக் கறிவுறுத்தலுமாம். இது நாணுத் துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.]

ககசக. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

[அல்ல குறிப்பட்ட பிற்றைஞான்று வந்த தலைமகனைத் தோழி யலர்கூறி வரைவுகடாயவழி அவன் சொல்லியது.]

(இ - ள்.) அலர் எழ ஆருயிர் நிற்கும் - மடந்தையொ டெம்மிடை நட்பு* ஊரின்க ணலரா யெழுதலான் அவளைப் பெறாது வருந்துமென் னரிய வுயிர் பெற்றதுபோன்று நிலைபெறும்; அதனைப் பாக்கியத்தால் பலர் அறியார் - அந்நிலைபேற்றைத் தெய்வத்தால் யானே யறிவதல்லது கூறுகின்ற பலரு மறியார்.

அல்ல குறிப்பட்டுத் தலைமகளை யெய்தப்பெறாத வருத்த மெல்லாந் தோன்ற அரிய வுயிரென்றும், அங்ஙன மறியாளை

---

* குறள் - ககஉஉ.

எளியளாக்கி யெடுக்கின்றமையின், அஃதவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாக நின்றதென்பான் 'அலரெழ வாருயிர் நிற்கு' மென்றும், பற்றுக்கோடாதலை அவ்வேதிலாரறியிற் றூற்றா தொழிவர்; ஒழியவே ஆருயிர் போமாகலான் 'அவரறியா தொழிகின்றது' தெய்வத்தானென்றுங் கூறினான். முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. (க)

ககசஉ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

[இதுவு மது.]

(இ - ள்.) மலர் அன்ன கண்ணாள் அருமை அறியாது - மலர் போலுங் கண்ணையுடையாளது எய்தற்கருமை யறியாது; இவ்வூர் அலர் எமக்கு ஈந்தது - இவ்வூர் அவளை யெளியளாக்கி அவளோடலர் கூறலை எமக்குபகரித்தது.

'அருமை' அல்லகுறிப்பாட்டானும் இடையீடுகளானும் அருமை. 'ஈந்த' தென்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின். அலர் கூறுவாரை அவர் செய்த வுதவிபற்றி 'இவ்வூ' ரென்றான். (௨)

ககசரு. உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊர் அறிந்த கௌவை உறாதோ - எங்கட்குக் கூட்டமுண்மை இவ்வூரறிதலான் விளைந்த அலர் எனக்குறுவ தொன்றன்றோ; அதனைப் பெறாஅது பெற்றன்ன நீர்த்து - அது கேட்ட வென்மனம் அக்கூட்டத்தைப் பெறாதிருந்தே பெற்றாற் போலு நீர்மையை யுடைத்தாகலான்.

பெற்றன்ன நீர்மை; பெற்றவழி யுளதா மின்பம்போலு மின்பமுடைமை. 'நீர்த்'தென்பதற்கேற்ற மனமென்னும் வினைமுதல் வருவிக்கப்பட்டது. (ந)

ககசச. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காமம் கவ்வையால் கவ்விது - என் காமம் இவ்வூரெடுக்கின்ற அலரானே யலர்தலை யுடைத்தாயிற்று; அது இன்றேல் தன்மை இழந்து தவ்வென்னும் - அவ்வலரில்லையாயின், தன்னியல்பிழந்து சுருங்கும்.

அலர்தல்: மேன்மேன்மிகுதல். செவ்வியுடையதனைச் செவ்வி தென்றாற்போலத் தவ்வையுடையதனைக் 'தவ்வி' தென்றார். இயல்பு: இன்பம் பயத்தல். 'தவ்வென்னு' மென்பது குறிப்புமொழி; "நூல் கால் யாத்த மாலை வெண்குடை, தவ்வென் றசைஇத் தாழ்துளி மறைப்ப"* என்புழியுமது. (ச)

ககசரு. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது.

[இதுவுமது.]

(இ - ள்.) களித்தொறும் கள் உண்டல் வேட்டற்று - கள்ளுண்பார்க்குக் களிக்குந் தோறுங் கள்ளுண்டல் இனிதாமாறுபோல; காமம் வெளிப்படுந்தோறும் இனிது - எனக்குக் காமம் அலராந் தோறும் இனிதாகாநின்றது.

வேட்கப்பட்டற்றாலென்பது 'வேட்டற்றா'லென் நின்றது. வேட்கை மிகுதியால் அலரும் இன்பஞ்செய்யாநின்றதென்பதாம். (ரு)

ககசசு. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

[இடையீடுகளானும் அல்லகுறியானுந் தலைமகனை யெய்தப் பெறாத் தலைமகள் அவன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய் அலரறிவுறீஇ வரைவுகடாயது.]

(இ - ள்.) கண்டது ஒருநாள் - யான் காதலரைக் கண்ணுறப் பெற்றது ஒருஞான்றே; அலர் திங்களைப் பாம்பு கொண்டற்று - அதனினாய வலர் அவ்வளவிற்றன்றித் திங்களைப் பாம்பு கொண்ட அலர்போன்று உலகெங்கும் பரந்தது.

காரியத்தைக் காரணமாக வுபசரித்துப் 'பாம்புகொண்டற்' றென்றாள். இருவழியும் 'மன்'னும் 'உம்'மையும் அசைநிலை. காட்சியின்றியும் அலர்பரக்கின்ற இவ்வொழுக்கம் இனியாகாது; வரைந்துகோடல் வேண்டுமென்பதாம. (சு)

ககசஎ. ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல்
னீராக நீளுமிந் நோய்.†

[வரைவுநீட ஆற்றாளாய தலைமகளைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்த தோழி, ஊரவரலரும் அன்னைசொல்லு நோக்கி யாற்றல்வேண்டுமெனச் சொல்லெடுப்பியவழி அவள் சொல்லியது.]

* நெடுநல்வாடை, அடி-கஅச, கஅரு.
† ரு - ஆம் திருவாய்மொழி, மாசற்சோதி - ச.

(இ - ள்.) இந்நோய் - இக்காமநோயாகிய பயிர்; ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல் நீராக நீளும் - இவ் வூரின் மகளி ரெடுக்கின்ற அலர் எருவாக, அது கேட்டு அன்னை வெகுண்டு சொல்லுகின்ற வெஞ்சொல் நீராக, வளராநின்றது.

'ஊரவ' ரென்பது தொழிலான் ஆணொழித்துநின்றது. ஏக தேச வுருவகம். சுருங்குதற் கேதுவாவனதாமே விரிதற் கேதுவாகா நின்றன வென்பதாம். வரைவானுதல் பயன். (எ)

ககசஅ. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

[இதுவு மது.]

(இ - ள்.) கௌவையால் காமம் நுதுப்பே மெனல் - ஏதிலா ரெடுக்கின்ற அலரால் நாங் காமத்தை யவித்துமென்று கருதுதல்; நெய்யால் எரி நுதுப்பே மென்றற்று - நெய்யா லெரியை யவித்து மென்று கருதுதலோ டொக்கும்.

மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன; கிளர்தற் கேரணமாய அலரால் அவித்தல் கூடா தென்பதாம். (அ)

ககசகூ. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

[வரைவிடை வைத்துப் பிரிவின்க ணாற்றாளாய தலைமகள் அவன் வந்து சிறைப்புறத்தா னாதலறிந்து அலரஞ்சி யாற்றல் வேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அஞ்சலோம்பு என்றார் பலர் நாண நீத்தக் கடை - தம்மை யெதிர்ப்பட்ட ஞான்று நின்னிற் பிரியேன் அஞ்சலோம் பென்றவர்தாமே இன்று கண்டார் பலரும் நாணும் வகை நம்மைத் துறந்தபின்; அலர் நாண ஒல்வதோ - நாமேதிலார் கூறு மலருக்கு நாணக்கூடுமோ? கூடாது.

'நாண' வென்னும் வினையெச்சம் 'ஒல்வ' தென்னுந் தொழிற் பெயருள் ஒல்லுதற்றொழிலோடு முடிந்தது. கண்டார் நாணு நிலைமையமாய யாம் நாணுதல் யாண்டைய தென்பதாம். (கூ)

கசநு0. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவா ளாய் அலரறிவுறீஇ அவன் உடன்போக்கு நயப்பச் சொல்லியது.]

(இ - ள்.) யாம் வேண்டுங் கௌவை இவ்வூர் எடுக்கும் - உடன்போகற் கேதுவாகலானோக்கி யாம் பண்டே விரும்புவதாய வலரை இவ்வூர் தானே யெடாநின்றது; காதலர்தாம் வேண்டின் நல்குவர் - இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால் அதனையினிதி னேர்வர், அதனால் இவ்வலர் நமக்கு நன்றாய் வந்தது.

எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. நங்கட் காதலுடைமை யின் மறாரென்பது தோன்றக் 'காதல' ரென்றாள். இவ்விருபது பாட்டும் புணர்ந்தனிமித்தம். (௧௦)

களவியல் முற்றிற்று.

---

## உ. கற்பியல்

இனிக் கற்புப் பதினெட்டதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி முதற்கட் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

## அதி. ககசு—பிரிவாற்றாமை

[அஃதாவது, வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொரு ளின்பங் களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமக ளைப் பிரிந்து செல்லும்; செல்லுஞான்று அப் பிரிவினை அவ ளாற்றாளாந்தன்மை. அஃது ஈண்டுப் பிரிவுணர்த்திய தலை மகற்குத் தோழி கூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன் குறிப்பானுணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்தழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.]

சுகடுக. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

[பிரிந்து கடிதின் வருவலென்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.]

(இ - ள்.) செல்லாமை உண்டேல் எனக்கு உரை - நீ யெம் மைப் பிரியாமை யுண்டாயின் அதனை யெனக்குச் சொல்; மற்று நின் வல்வரவு வாழ்வார்க்கு உரை-அஃதொழியப் பிரிந்துபோய் விரைந்து வருதல் சொல்லையாயின் அதனை அப்பொழுது உயிர் வாழ்வார்க்குச் சொல்.

தலைமகளை யொழித்து 'எனக்' கென்றாள், தானவளென்னும் வேற்றுமையின்மையின். அக்காலமெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காணவல்ல ளல்லள், பிரிந்தபொழுதே யிறந்துபடு மென்பதாம். அழுங்குவித்தல் பயன். இதனைத் தலைமகள் கூற்றாக்கி யுரைப்பாரு முளர்.* (க)

சுகடுஉ. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.

[பிரிவு தலைமகன் குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் பார்வல் இன்கண் உடைத்து - தழையுங் கண்ணியுங் கொண்டு பின்னின்றஞான்று அவர் நோக்கு மாத்திர

---

* மணக்குடவர்.

மும் புணர்ச்சி குறித்தமையான் நமக்கின்ப முடைத்தாயிருக்கும்; புணர்வு பிரிவஞ்சும் புன்கண் உடைத்து - இன்று அப் புணர்ச்சி தான் நிகழாநிற்கவும் அது பிரிவரென் றஞ்சு மச்சத்தினை யுடைத் தாயிற்று, அவரன்பினிலைமை யிது.

'பார்வ' லென்றதனுற் புணர்ச்சிபெறுத் பின்னிலைக்காலம் பெறப்பட்டது. 'புன்க' ணென்னுங் காரணப்பெயர் காரியத்தின் மேலாயிற்று. அவ்வச்சத்தினை யுடைத்தாதலாவது, "முள்ளுறழ் முளையெயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினு மகிழ் செய்யு மென வுரைத்து மமையாரென், ஞெள்ளிழை திருத்தும்"* பண்டையிற் சிறப்பால் அவன் பிரிதற்குறிப்புக் காட்டி அச்சஞ் செய்தலுடைமை. அழுங்குவித்தல் பயன். (உ)

ககருங. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான்.

[இதுவு மது.]

(இ - ள்.) அறிவு உடையார் கண்ணும் - பிரியேனென்ற தஞ் சொல்லும் நம் பிரிவாற்றுமையும் அறிதலுடையராய காதலர் கண் ணும்; ஓரிடத்துப் பிரிவு உண்மையான் - ஒரோவழிப் பிரிவு நிகழ்த லான்; தேற்றம் அரிது - அவர் சொல்லும், தலையளியும் பற்றி நம்மாட் டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது.

'அரோ' அசைநிலை. உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. (ங)

ககருச. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

[இதுவு மது.]

(இ - ள்.) அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் - எதிர்ப்பட்ட ஞான்றே தலையளிசெய்து நின்னிற் பிரியேன் அஞ்சலென்றவர் தாமே பின் பிரிவராயின்; தெளித்த சொல் தேறியார்க்குத் தவறு உண்டோ - அவர்க்கன்றி அவர் தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிந்தார்க்குக் குற்றமுண்டோ?

'தேறியா' ரென்பது தன்னைப் பிறர்போற் கூறல். சொல் லுஞ் செயலு மொவ்வாமைக்குற்றம் அவர்க்கெய்தும், அஃதெய்தா வகை யழுங்குவியென்பது கருத்து. (ச)

* கலித்தொகை - ங.

சகஙுரு. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

[இதுவு மது.]

(இ - ள்.) ஓம்பின் அமைந்தார் பிரிவு ஓம்பல் - என்னுயிரைச் செல்லாமற் காத்தியாயின், அதனை யாளுதற் கமைந்தாருடைய செலவினை அழுங்குவிப்பாயாக; மற்று அவர் நீங்கிற் புணர்வு அரிது- அழுங்குவிப்பாரின்றி அவர் செல்வாராயின் அவராலாளப்பட்டவுயி ருஞ் செல்லும், சென்றாற் பின்னவரைக் கூடுதல் எனக் கரிதாம்.

ஆளுதற்கமைதல்: இறைவராதற்குத் தெய்வத்தா லேற்புடைய ராதல். 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. (ரு)

சகஙுசு. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

[தலைமகன் பிரிவுணர்த்தியவாறு வந்து சொல்லிய தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் பிரிவு உரைக்கும் வன்கண்ணராயின் - நங்கவ வுக்கடுமையறிந்த தலைவர்தாமே நம்முனின்று தம் பிரிவினை யுணர்த் தும் வன்கண்மை யுடையராயின்; நல்குவர் என்னும் நசை அரிது- அத்தன்மையார் பின்பு நம் மாற்றாமை யறிந்துவந்து தலையளி செய்வ ரென்றிருக்கு மாசை விடப்படும்.

அருமை: பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவெண்ணுதலும் உணர்த்தலும் வல்லராயினார். பிரிந்துபோய் அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நல்குதல் யாண்டையது தென்ப தாம். அழுங்குவித்தல் பயன். (சு)

சகஙுஎ. துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை.

[இதுவு மது.]

(இ - ள்.) துறைவன் துறந்தமை-துறைவன் என்னைப் பிரிய லுற்றமையை; முன்கை யிறை இறவாநின்ற வளை தூற்றாகொல் - அவனுணர்த்தாமற்றாமே யுணர்ந்து என் முன்கையி னிறையினின் றுங் கழலாநின்ற வளைகள் எனக்கறிவியாவோ, அவனுணர்த்த வுணர்ந்துவந்து நீ யறிவித்தல் வேண்டுமோ ?

முன்னே நிகழ்ந்தமையிற் 'றுறந்தன்ம' யென்றும், கேட்ட துணையான் மெலிந்து ஆற்றாமையின் 'இறவாநின்ற' வென்றுங் கூறினாள். அழுங்குவித்து வந்து கூறற்பாலை யல்லையாய் நீயும் இவ் வளைகள் செய்தனவே செய்தாயெனப் புலந்து கூறியவாறு. (எ)

ககருஅ. இன்னு தினனில்லூர் வாழ்த லதனினு
மின்னு தினியார்ப் பிரிவு.

[இதுவு மது.]

(இ - ள்) இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது-மகளிர்க்குத் தங் குறிப்பறியுந் தோழியரில்லாத வேற்றாரின்கண் வாழ்தலின் னாது: இனியார்ப் பிரிவு அதனினும் இன்னாது - அதன்மேலுந் தங் காதலரைப் பிரிதல் அதனினு மின்னாது.

தலைவன் செலவினை யழுங்குவித்து வாராது உடன்பட்டு வந் தமைபற்றிப் புலக்கின்றாளாகலின், 'இனனில்லூ' ரென்றாள். உலகியல் கூறுவாள்போன்று தனக் கவ்விரண்டு முண்மை கூறிய வாறு. (அ)

ககருகூ. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.*

[காமந் தீயேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான் நீ யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) தீத் தொடிற் சுடிற் சுடலல்லது - தீத் தன்னைத் தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது; காமநோய்போல விடிற்சுடல் ஆற்றுமோ - காமமாகிய நோய்போலத் தன்னை யகன்றாற் றப்பாது சுடுதலை வற்றோ? மாட்டாது.

சுடுமாயினென்பது மந்திர மருந்துகளாற் றம்பிக்கப்படாதாயி னென்றவாறு. கிட்டத்திற் கதுவுமில்லை யென்பாள் வாளா 'சுட' லென்றாள். அகறல்: நுகராமை. சுடலென்பது முன்னுங் கூட் டப்பட்டது. தீயினுங் கொடியதனை யானாற்றுமா றென்னை யென்ப தாம். (கூ)

ககசுo. அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ்வார் பலர்

[தலைவியர் பலரும் பிரிவாற்றியிருப்பர், அது நீ செய்கின்றிலை யென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) (நீ சொல்லுகின்றதொக்கும்), அரிது ஆற்றி அல் லல் நோய் நீக்கி - பிரிவுணர்த்தியவழி அதற்குடம்பட்டுப் பிரியுங்

---

* நாலடியார் ௬ கூo.

கால் நிகழும் அல்ல னோயினையு நீக்கி; பிரிவு ஆற்றிப் பின் இருந்து வாழ்வார் பலர் - பிரிந்தால் அப்பிரிவுதன்னையு மாற்றிப் பின்னு மிருந்து உயிர்வாழு மகளிர் உலகத்துப் பலர்.

பண்டையிற் சிறப்பத் தலையளிசெய்து பெற் றின்புறுகின்ற வெல்லைக் கண்ணே அஃதிழந்து துன்புறுதற் குடம்படுதல் அரிய தொன்றாக லின் அரியதனைச் செய்தென்றும், செல்லுந் தேயத்து அவர்க்கியாது நிகழுமென்றும், வருந்துணையும் யாமாற்றியிருக்குமா றென்னென் றும், அவ்வரவுதான் எஞ்ஞான்று வந்தெய்து மென்றும், இவ் வாற்றா னிகழுங் கவலை மனத்து நீங்காதாகலான் 'அல்லனோய் நீக்கி' யென்றும், பிரிந்தால் வருந்துணையும் அகத்து நிகழும் காம வேதனையும் புறத்து யாழிசை, மதி, தென்ற லென்றிவை முதலாக வந்து அதனை வளர்ப்பனவும் ஆற்றலரியவாகலிற் 'பிரிவாற்றி' யென்றும், தங் காதலரை யின்றியமையா மகளிருள் இவை யெல்லாம் பொறுத்துப் பின்னு மிருந்து உயிர்வாழ்வார் ஒருவரு மில்லை யென்பது குறிப்பாற்றோன்றப் 'பின்னிருந்து வாழ்வார் பல' ரென்றுங் கூறினாள். 'அரி' தென்பது வினைக்குறிப்புப் பெயர். பிரிவின்க ணிகழ்வனவற்றைப் 'பிரி' வென்றாள். செய்து, நீக்கி, ஆற்றி யென்பன ஓசைவகையான் அவ்வவற்ற தருமையுணர நின் றன. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. யானு மிறந்துபடுவ லென்பது கருத்து. (கO)

---

## அதி. ககஎ—படர்மெலிந்திரங்கல்

[அது படரான்மெலிந்திரங்கலென விரியும். அஃதாவது பிரிவாற்றா ளாய தலைமகள் தானுறுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலின், அந்நினைவான் மெலிந்திரங்குதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

ககசுக. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
ஊற்றுநீர் போல மிகும்.

[காமநோயை வெளிப்படுத்தல் நின்னுக் கேலாதென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) நோயை யான் மறைப்பேன் - இந்நோயைப் பிற ரறிதலஞ்சி யான் மறையாநின்றேன்; இஃதோ இறைப்பவர்க்கு ஊற்றுநீர்போல மிகும் - நிற்பவும், இஃது அந்நாண்வரை நில்லாது நீர் வேண்டுமென் றிறைப்பவர்க்கு ஊற்றுநீர் மிகுமாறுபோல் மிகா நின்றது.

அம்மறைத்தலாற் பயனென்னென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. "இஃதோ செல்வற்கொத்த தொன்யான்" என்புழிப்போல ஈண்டுச் சுட்டுப்பெயரீறு திரிந்து நின்றது. இஃதோர் நோயை யென்று பாடமோதுவாரு முளர்; அது பாடமன்மை யறிக. இனி அதற்கடுத்தது நீ செயல்வேண்டு மென்பதாம். (க)

கசகூஉ. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.

[ஈண்டையா ரறியாமன் மறைத்தல் ஆண்டையா ரறியத், தூதுவிடுத லென்னு மிரண்டனுள் ஒன்று செயல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்,) இந்நோயைக் கரத்தலும் ஆற்றேன் - இந்நோயை ஈண்டையாரறியாமன் மறைத்தலும் வல்லே னாகின்றிலேன்; நோய் செய்தவர்க்கு உரைத்தலும் நாணுத் தரும் - ஆகாக்கால், நோய் செய்தார்க் குரைக்க வெனின், அதுவும் எனக்கு நாணினைத் தாராநின்றது; இனி யென்செய்கோ?

ஒருகாலைக் கொருகால் மிகுதலிற் 'கரத்தலுமாற்றே' னென்றும், சேயிடைச் சென்றவர்க்கு இதுசொல்லித் தூதுவிட்டால் இன்னுமிருந்தேனென்பது பயக்குமென்னுங் கருத்தால் 'நாணுத்தரு' மென்றுங் கூறினாள். (உ)

கசகூந. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) காமமும் நாணும் - காமநோயும் அதனைச் செய்தவர்க்கு உரைக்கவொல்லாத நாணும்; நோனா என் உடம்பின் அகத்து - தம்மைப் பொறாத என் னுடம்பின்கண்ணே; உயிர் காவாத் தூங்கும் - உயிர் காத்தண்டாக அதனிரு தலையினுந் தூங்காநின்றன.

பொறாமை மெலிவானாயது. தூங்குமென்பது, ஒன்றினொன்று மிகாது இரண்டும் ஒத்தசீரவென்பது தோன்றநின்றது. தூதுவிடவும் ஒழியவும் பண்ணுவனவாய காம நாண்கள் தம்முளொத்து உயிரினை யிறுவியாநின்றன; யான் அவற்று ளொன்றின்க ணிற்கமாட்டாமையின் இஃதிற்றேவிடு மென்பதாம். (ந)

ககசுச. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
மேமப் புணைமன்னு மில்.

[தலைவியர் காமக்கடற் படார், படினும், அதனை எற்ற புணையா னீந்திக் கடப்பரென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) உண்டு காமக் கடலே - யாவர்க்கும் உளவாய் வருகின்ற இவ்விரண்டனுள்ளும் எனக்குண்டாகின்றது காமக் கடலே: அது நீந்தும் ஏமப் புணை இல் - அதனை நீந்தும் அரணாகிய புணை யில்லை.

இருவழியும் 'மன்'னும் 'உம்'மும் அசைநிலை. தூதுவிட்டு இதற்குப் புணையாகற்பாலையாய நீயும் ஆயிற்றிலை யென்பது கருத்து.

ககசுரு. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

[தூதுவிடாமை நோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது.]

(இ - ள்.) நட்பினுள் துயர்வரவு ஆற்றுபவர் - இன்பஞ்செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்ப வரவினைச் செய்யவல்லவர்; துப்பின் எவனாவர்கொல் - துன்பஞ்செய்தற்குரிய பகைமைக்கண் என் செய்வார்கொல்லோ?

துப்புப் பகையுமாதல் "*துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மைய, னட்பெதிர்ந் தோர்க்கே யங்கை யண்மையன்" என்பதனானறிக. அப் பகைமை ஈண்டுக் காணாமையின் அவர் செய்வது அறியப் பெற்றிலே மென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக் கண் வந்தது. துயர்வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலை யெனப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக்கியும் பிறளாக்கியுங் கூறினாள். (ரு)

ககசுசு. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது.

[காமத்தானின்பமுற்றார்க்கு அதனிலும் துன்பம் வருமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) காமம் இன்பம் கடல் - காமம் புணர்வா லின்பஞ் செய்யுங்கால், அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம்; மற்றஃது அடுங்கால் துன்பம் அதனிற் பெரிது - இனி அதுதானே பிரிவாற் றுன்பஞ் செய்யுங்கால், அத்துன்பம் அக்கடலினும் பெரிதாம்.

---

* புறநானூறு - நஅ0.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. 'அடுங்கா'லென வந்தமையின், மறுதலையெச்சம் வருவிக்கப்பட்டது, பெற்ற வின்பத்தோடொத்துவரின் ஆற்றலாம்; இஃததன தளவன்றென்பது கருத்து.

௧௧௬௭. காமக் கடும்புன லீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.

[காமக்கடல் நிறைபுணையாக நீந்தப்படு மென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) காமக் கடும்புனல் நீந்திக் கரை காணேன் - காமமாகிய கடலை நீந்தாதேனல்லேன், நீந்தியும் அதற்குக் கரை காண்கின்றிலேன்; யாமத்தும் யானே உளேன் - அக்காணாமைக் காலந்தான் எல்லாருந் துயிலும் அரை யிருளாயிற்று; அவ்வரை யிருட்கண்ணும் அதற்கொரு துணையின்றி யானேயாயினேன்; ஆயும் இறந்துபட்டுய்ந்துபோகா துளேனுகாநின்றேன்; ஈதொரு தீவினைப்பய னிருந்தவாறென் !

கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது. உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. யானே யாயினே னென்பது நீ துணையாயிற்றிலை யென்னுங் குறிப்பிற்று. (எ)

௧௧௬௮. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
வென்னல்ல தில்லை துணை.

[இரவின் கொடுமை சொல்லி யிரங்கியது.]

(இ - ள்.) இரா அளித்து - இவ்விரா அளித்தா யிருந்தது: மன் உயிர் எல்லாம் துயிற்றி என்னலல்லது துணை இல்லை - உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களையெல்லாந் தானே துயிலப்பண்ணுதலான் என்னையல்லது வேறு துணையுடைத்தாயிற்றில்லை.

'துயிற்றி' யெனத் திரிந்துநின்ற வினையெச்சம் - அவாய்நிலையான் வந்த உடைத்தாதலோடு முடிந்தது. துணையோடொன்றுகின்ற உயிர்களெல்லாம் விட்டு இறந்துபடு மெல்லையேனுய என்னையே துணையாகக்கோடலின் அறிவின்றென்பதுபற்றி 'அளித்' தென்றாள்: இகழ்ச்சிக்குறிப்பு. (அ)

௧௧௬௯. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
ணெடிய கழியு மிரா.

[இதுவுமது.]

(இ - ள்.) இந்நாள் நெடிய கழியும் இரா - காதலரோடு நாமின்புற்ற முன்னாள்களிற் குறியவாய் அவர் பிரிவாற்றே

மாகின்ற இந்நாட்களிலே நெடியவாய்ச் செல்கின்ற கங்குல்கள்; கொடியார் கொடுமையின் தாம் கொடிய - அக்கொடியாரது கொடுமைக்கு மேலே தாங் கொடுமை செய்யாநின்றன.

தன்னாற்றாமை கருதாது பிரிதலின், 'கொடியா' ரென்றாள். கொடுமை: கடிதின்வாராது நீட்டித்தல். அவர் பிரிவானும் நீட்டிப்பானுமுளதாய ஆற்றாமைக்குக் கண்ணோடாமைமேலும் பண்டையினெடியவாய்க் கொடியவாகா நின்றன வென்பதாம். (கூ)

கககo. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோவென் கண்.

[நின் கண்கள் பேரழகழிகின்றனவாகலின் அழற்பாலையல்லை யென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) உள்ளம்போன்று உள்வழிச் செல்கிற்பின் - மனம் போலக் காதலருள்ள தேயத்துக் கடிதிற் செல்லவல்லனவாயின்; என் கண் வெள்ளநீர் நீந்தல-என் கண்கள் இங்ஙனம் வெள்ளமாகிய தந்நீரை நீந்தா.

அது மாட்டாமையின், இனி அவற்றிற்கு நீந்துதலே யுள்ள தென்பதுபட நின்றமையின், 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. மனத்திற்குச் செலவாவது நினைவேயாகலின் 'உள்ளம்போன்'றென்றும், மெய்க்கு நடந்துசெல்ல வேண்டுதலிற் கண்கள் அதனொடு சென்று காதலரைக் காண்டல் கூடாதென்னுங் கருத்தாற் 'செல்கிற்பி'னென்றுங் கூறினாள். இதனான் வருகின்ற வதிகாரமுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. (கO)

---

## அதி. ககஅ—கண்விதுப்பழிதல்

[அஃதாவது, கண்கள் தங் காட்சி விதுப்பான் வருந்துதல். காட்சி விதுப்புத் தலைமகனைக் காண்டற்கு விரைதல். இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்திரங்கலின்பின் வைக்கப்பட்டது.]

கககக. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

[நின் கண்கள் கலுழ்ந்து தம் மழகிழவாநின்றன; நீ யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) தண்டா நோய் யாம் கண்டது தாம் காட்ட - இத் தணியா நோயை யாமறிந்தது தாமெமக்குக் காதலரைக் காட்

டலானன்றே; கண் தாம் கலுழ்வது எவன்கொல் - அன்று அத் தொழிலவாய கண்கள் இன்று எம்மைக் காட்டச் சொல்லி யழுகின் றது என்கருதி?

'காட்ட' வென்பதற்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றுந் தாமே காட்டுதலல்லது யாங் காட்டுதல் யாண்டையதென்பதாம். (௧)

௧௧௭௨. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைதல் உழப்ப தெவன்.

[இதுவு மது.]

(இ - ள்.) தெரிந்து உணரா நோக்கிய உண்கண் - மேல் விளைவதனை யாராய்ந்தறியாது அன்று காதலரை நோக்கிநின்ற உண்கண்கள்; பரிந்து உணராப் பைதல் உழப்பது எவன் - இன்று இது நம்மால் வந்ததாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக் கூறுபடுத்துணராது துன்பமுழப்பது என்கருதி?

விளைவது: பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருத்துதல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு அது வந்தவழிப் பொறுத்தலன்றேயுள்ளது; அதுவுஞ் செய்யார் வருந்துதல் கழிமடச்செய்கை யென்பதாம். (௨)

௧௧௭௩. கதுமெனத் தானோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) தாம் கதுமென நோக்கித் தாமே கலுழும் இது - இக்கண்கள் அன்று காதலரைத் தாமே விரைந்து நோக்கி இன்று தாமே விரைந்தழுகின்ற விது; நகத்தக்கது உடைத்து - நம்மாற் சிரிக்கத்தக்க வியல்பினை யுடைத்து.

கண்களென்பது அதிகாரத்தான் வந்தது. இதுவென்றது மேற்கூறிய கழிமடச்செய்கையை. அது வருமுன்னர்க் காப்பார்க்கு நகை விளைக்குமாகலான், 'நகத்தக்கதுடைத்' தென்றாள். (௩)

௧௧௭௪. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
வுய்விநோ யென்க ணிறுத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) உண்கண் - உண்கண்கள்; உயலாற்றா உய்வு இல் நோய் என்கண் நிறுத்து - அன்று யானுய்யமாட்டாமைக் கேது

வாய ஒழிவில்லாத நோய் என்கண்ணே நிறுத்தி; பெயலாற்ரு நீர் உலந்த - தாமு மழுதலை மாட்டாவண்ணம் நீர் வற்றிவிட்டன.

நிறுத்தல்: பிரிதலும் பின்கூடாமையுமுடையாரைக் காட்டி அதனால் நிலைபெறச் செய்தல். முன் எனக் கின்னாதன செய்தலாற் பின் தமக்கின்னாதன தாமே வந்தன* வென்பதாம். (ச)

கஎரு. படலாற்ரு பைத லுழக்குங் கடலாற்ருக்
காமநோய் செய்தவென் கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) கடல் ஆற்ருக் காமநோய் செய்த என் கண் - எனக்குக் கடலுஞ் சிறிதாம்வண்ணம் பெரிதாய காமநோயைச் செய்த என் கண்கள்; படல் ஆற்ரு பைதல் உழக்கும் - அத்தீவினையாற் ருமுந் துயில்கிலவாய்த் துன்பத்தையு முழவாநின்றன.

காமநோய் காட்சியான் வந்தமையின், அதனைக் கண்களே செய்ததாக்கிக் கூறினள். துன்பம் அழுதலாலுயது. (ரு)

கஎசு. ஒஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
டாஅ மிதற்பட் டது.

[இதுவு மது.]

(இ - ள்.) எமக்கு இந்நோய் செய்தகண் தாஅம் இதற்பட்டது - எமக்குக் காமநோயினைச் செய்த கண்கடாமும் இத்துயிலா தழுதற் கண்ணேபட்டது; ஓஒ இனிதே - மிகவு மினிதாயிற்று.

'ஓ' வென்பது மிகுதிப்பொருட்கண் வந்த குறிப்புச் சொல். தம்மால் வருத்தமுற்ற வெமக்கு அது தீர்ந்தாற்போன்ற தென்பதாம்.

கஎஎ. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) விழைந்து இழைந்து வேண்டி அவர்க்கண்ட கண் - விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள்; உழந்துழந்து உள்நீர் அறுக - இன்று இத்துயிலா தழுங்கலாய துன்பத்தினை யுழந்துழந்து தம்மகத்துள்ள நீர் அற்றேபோக!

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ் பொருளின் றொழில் இடத்தின்மே னின்றது. (எ)

* குறள் - ருகக.

கக எஅ. பேணது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காண தமைவில கண்.

[காதலர் பிரிந்து போயினாரல்லர்; அவரீண்டுளர்; அவரைக் காணு மளவும் நீ யாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) பேணாது பெட்டார் உளர் - நெஞ்சால் விழையாது வைத்துச் சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவ்விடத்தேயுளர்; மற்று அவர்க் கண் காணாது அமைவில - அவ்வுண்மையாற் பயன் யாது? அவரைக் கண்கள் காணாதமைகின்றன வில்லையாயின.

செயலாற் பிரிந்து நின்றமையிற் 'பேணா' தென்றும், முன்னலம் பாராட்டிப் பிரிவச்சமும் வன்புறையுங் கூறினாராகலிற் 'பெட்டா' ரென்றுங் கூறினாள். 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. ஒகாரம் அசைநிலை. யானாற்றவுங் கண்கள் அவரைக் காண்டற்கு விரும்பாநின்றன வென்பதாம். இனிக் கொண்கனையென்று பாடமாயின், என் கண்கள் தம்மைக் காணாதமைகின்ற கொண்கனைத் தாங் காணாதமைகின்றன வில்லை; இவ்வாறே தம்மையொருவர் விழையாதிருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துளரோ வென்றுரைக்க. இதற்கு 'மன்' அசைநிலை. (அ)

ககஎகூ. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

[நீயுமாற்றி நின் கண்களுந் துயில்வனவாதல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) வாராக்கால் துஞ்சா - காதலர் வாராத ஞான்று அவர் வரவுபார்த்துத் துயிலா; வரின் துஞ்சா - வந்த ஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா; ஆயிடைக்கண் ஆரஞர் உற்றன - ஆகலான் அவ்விருவழியும் என் கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய.

'ஆயிடை' யெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒரு ஞான்று மில்லை யென்பதாம். (கூ)

ககஅ௦. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போ
லறைபறை கண்ணா ரகத்து.

[காதலரை இவ்வூர் இயற்பழியாமல் அவர் கொடுமையை மறைக்க வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) எம்போல் அறைபறை கண்ணார் அகத்து மறைபெறல் - எம்மைப்போலும் அறைபறையாகிய கண்ணினையுடை

# அதி. கஉஅ—குறிப்பறிவுறுத்தல்

[அஃதாவது, தலைமகன், தலைமகள், தோழியென் றிவர் ஒருவர் குறிப்பினை யொருவர்க் கறிவுறுத்தல். இது, பிரிந்துபோய தலைமகன் வந்து கூடியவழி நிகழ்வதாகலின், அவர்வயின் விதும்பலின்பின் வைக்கப்பட்டது.]

கஉஎக. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

[பிரிந்துகூடிய தலைமகன் வேட்கை மிகவினுற் புதுவது பன்னாளும் பாராட்டத் தலைமகள் இதுவொன்றுடைத் தென வஞ்சியவழி அதனை யவள் குறிப்பா னறிந்து அவ னவட்குச் சொல்லியது.]

(இ - ள்.) கரப்பினும் - நீ சொல்லாது மறைத்தாயாயினும்; ஒல்லா கையிகந்து - அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து; நின் உண் கண் உரைக்கலுறுவதி ஒன்று உண்டு - நின்னுண்கண்களே எமக்குச் சொல்ல லுறுவதொரு காரிய முண்டாயிராநின்றது ;இனி யதனை நீயே தெளியச் சொல்வாயாக.

கரத்தல்: நாணு னடக்குதல். தன்கட் பிரிதற்குறிப்புளதாகக் கருதி வேறுபட்டாளது வேறுபாடு குறிப்பானறிந்து அவட்குத் தன் பிரியாமைக்குறிப் பறிவுறுத்தவாறு. (க)

கஉஎஉ. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது. [குப்

[நாணல் அவள் அது சொல்லாளாயவழி அவன் றேழிக்குச் சொல்லியது.]

(இ - ள்.) கண் நிறைந்த காரிகைக் காம்பு ஏர் தோட் பேதைக்கு - என் கண்ணிறைந்த வழகினையும் வேயை யொத்த தோளினையுமுடைய நின் பேதைக்கு; பெண் நிறைந்த நீர்மை பெரிது - பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அவ்வளவன்றி மிகுந்தது.

இலஃதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், இவ் வாறு கூறினன். (உ)

கஉஎங. மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) மணியில் திகழ் தரும் நூல்போல் - கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக் கிடந்து புறத்துப் புலனு நூல்போல; மடந்தை

அணியில் திகழ்வது ஒன்று உண்டு - இம்மடந்தைய தணியகத்துக் கிடந்து புறத்துப் புலனாகின்றதொரு குறிப்புண்டு.

அணி: புணர்ச்சியாலாய வழகு. அதனகத்துக் கிடத்தலாவது அதனோடு உடனிகழ்தற்பாலதன்றிவைத்து உடனிகழ்தல். அதனை யானறிகின்றிலேன்; நீ யறிந்து கூறல்வேண்டு மென்பது கருத்து.

கஉஎ௪. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) முகை மொக்குள் உள்ளது நாற்றம்போல் - முகை யது முகிழ்ப்பி னுளதாய்ப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல; பேதை நகை மொக்குள் உள்ளது ஒன்று உண்டு - நின் பேதை என்னொடு நக்க கருது நகையது முகிழ்ப்பி னுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு.

முகிழ்ப்பு: முதிர்ச்சியாற் புடைபடுதல். 'நகை': புணர்ச்சி யின்பத்தா னிகழ்வது. (௪)

கஉஎரு. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) செறி தொடி செய்து இறந்த கள்ளம் - நெருங்கிய வளைகளை யுடையாள் என்கண் ணில்லாத தொன்றனை யுட்கொண்டு அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு; உறு துயர் தீர்க்கு மருந்து ஒன்று உடைத்து - என் மிக்க துயரைத் தீர்க்கு மருந்தாவ தொன்றனை யுடைத்து.

உட்கொண்டது பிரிவு. 'கள்ளம்': ஆகுபெயர். மறைத்தற் குறிப்புத் தானு முடன்போக் குட்கொண்டது. 'உறு துயர்' நன்று செய்யத் தீங்கு விளைதலானும் அதுதான் றீர்திறம் பெருமையானும் உளதாயது. 'மருந்து': அப்பிரிவின்மை தோழியாற் றெளிவித்தல். நீ யது செய்தல் வேண்டுமென்பதாம். (ரு)

கஉஎசூ. பெரிதாற்றிப் பெட்பக் கலந்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

[தலைமகன் குறிப்பறிந்த தலைமகள் அதனை அது தெளிவிக்கச் சென்ற தோழிக் கறிவுறுத்தது.]

(இ - ள்.) பெரிது ஆற்றிப் பெட்பக் கலத்தல் - காதலர் வந்து தம் பிரிவினானாய துன்பத்தினை மிகவு மாற்றி நாமகிழும் வண்ணங் கலக்கின்ற கலவி; அரிது ஆற்றி அன்பின்மை சூழ்வது உடைத்து - இருந்தவாற்றான் மேலுமத் துன்பத்தினை அரிதாக வாற்றியிருந்து அவரன்பின்மையை நினையுந் தன்மை யுடைத்து.

பிரிதற்குறிப்பினாற் செய்கின்றதாகலான், முடிவில் இன்னா தாகாநின்ற தென்பதாம். (சு)

கஉஎஎ. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

[இதுவு மது.]

(இ - ள்.) தண்ணந் துறைவன் தணந்தமை - குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை; நம்மினும் வளை முன்னம் உணர்ந்த - அவன் குறிப்பா னறிதற்குரிய நம்மினும் இவ்வளைகள் முன்னே யறிந்தன.

கருத்து நிகழ்ந்ததாகலிற் 'றணந்தமை' யென்றும், யான் றெளிய வுணர்தற்கு முன்னே தோள்கண் மெலிந்தன வென்பாள் அதனை வளைமேலேற்றி அதுதன்னை யுணர்வுடைத்தாக்கியுங் கூறினாள். (எ)

கஉஎஅ. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

[இதுவு மது.]

(இ - ள்.) எங் காதலர் சென்றார் நெருநற்று - எங் காதலர் பிரிந்து போயினார் நெருநற்றே; யாமும் மேனி பசந்து எழுநாளேம் - அப்பிரிவிற்கு யாமும் மேனி பசந்து எழுநாளுடைய மாயினேம்.

நெருநற்றுச் செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்ட தென்பாள் 'நெருநற்றுச் சென்றா' ரென்றும், அதனை யையுற்றுச் செல்கின்றது எழுநா ளுண்டாதலின் அன்றே மேனி பசந்த தென்பாள் 'மேனி பசந்தெழுநாளே' மென்றுங் கூறினாள். இவ் வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிப்பினை யுணர்த்திநின்றது. (அ)

கஉஎகூ. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
யஃதாண் டவள்செய் தது.

[தலைமகள் குறிப்பறிந்த தோழி அதனைத் தலைமகற் கறிவித்தது.]

(இ - ள்.) (யானது தெளிவித்தவழித் தெளியாது) தொடி நோக்கி - அவர் பிரிய யா னீண்டிருப்பின் இவை நில்லா வெனத்

தன் றொடியை நோக்கி; மென்றோளும் நோக்கி - அதற்கேதுவாக இவை மெலியுமெனத் தன் மென்றோள்களையு நோக்கி; அடி நோக்கி-பின்னிவ் விரண்டும் நிகழாமல் நீர் நடந்து காத்தல் வேண்டு மெனத் தன் னடியையு நோக்கி; ஆண்டு அவள் செய்தது அஃது - அவ்வனம் அவள் செய்த குறிப்பு உடன்போக்காயிருந்தது.

செய்த குறிப்புச் செய்தற் கேதுவாய குறிப்ப. 'அஃ'தென்றாள் "செறிதொடி செய்திறந்த கள்ள"* மென்றா னாகலின். பிரிதற் குறிப்புண்டாயின் அஃதழுங்குதல் பயன். (கூ)

கஉஅ0. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு.

[தலைமகன் பிரியாமைக் குறிப்பினைத் தோழிக் கறிவுறுத்தது.]

(இ - ள்.) காம நோய் கண்ணினாற் சொல்லி இரவு - மகளிர் தங் காமநோயினைத் தோழியர்க்கும் வாயாற் சொல்லாது கண்ணினாற் சொல்லி, அது தீர்க்க வேண்டுமென்று அவரை யிரவாது உடன் போதல் குறித்துத் தம்மடியினை யிரத்தல்; பெண்ணினால் பெண்மை உடைத்து என்ப-தமக் கியல்பாகிய பெண்மை மேலும் ஓர் பெண்மை யுடைத்தென்று சொல்லுவர் அறிந்தோர்.

தலைமகள தடன்போதற் றுணிபு தோழியாற் றெளிந்தானாக லின், தன் பிரிவின்மைக் குறிப்பினை யறிவுறுப்பான், அவள் பெண்மையினைப் பிறர்மேலிட்டு வியந்து கூறியவாறு. (க0)

---

## அகூ. கஉகூ—புணர்ச்சிவிதும்பல்

[அஃதாவது, தலைமகனுந் தலைமகளும் புணர்ச்சிக்கண்ணே விரைதல். மேற் புணர்ச்சிமிகுதிபற்றித் தலைமகன் பிரிதற் குறிப்பறி வுறுத்த தலைமகள் அவன்மாட்டே நிகழாது வேட்கை மிகவினாற் பின்னுந் தன்கண்ணே நிகழ்தலான், இது குறிப்பறிவுறுத்தலின் பின் வைக்கப்பட்டது.]

கஉஅக. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

[பிரிதற்குறிப்பின னாகியானோடு நீ புலவாமைக்குக் காரணம்யாதென நகையாடிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.]

---

* குறள் - கஉஎ0.

(இ - ள்.) உள்ளக் களித்தலும் - நினைந்த துணையானே களிப் பெய்தலும்; காண மகிழ்தலும் - கண்ட துணையானே மகிழ் வெய்த லும்; கள்ளுக்கு இல் காமத்திற்கு உண்டு - கள்ளுண்டார்க்கில்லை காமமுடையார்க் குண்டு.

களித்தல்: உணர்வழியாத்து; மகிழ்தல்: அஃதழிந்தது. இவ் விரண்டும் உண்டுழியல்ல தின்மையிற் 'கள்ளுக்கில்' லென்றாள். 'உண்'டென்பது இறுதி விளக்கு. அப்பெற்றித்தாய காமமுடைய யான்புலத்தல் யாண்டைய தென்பதாம். (க)

கஉஅஉ. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காம நிறைய வரின்.

[இதுவு மது.]

(இ - ள்.) காமம் பனைத்துணையும் நிறைய வரின்-மகளிர்க்குக் காமம் பனையளவினும் மிக வுண்டாமாயின்; தினைத்துணையும் ஊடாமை வேண்டும் - அவரால், தங் காதலரோடு தினையளவு மூடு தல் செய்யாமை வேண்டப்படும்.

'பனைத்துணையு' மென்புழி ஐந்தனுருபு விகாரத்தாற் றொக்கது. ஊடின் வருத்த மிகு மெனப் பிறர்க்குறுதி கூறுவாள் போன்று தன் விதுப்புக் கூறியவாறு. (உ)

கஉஅங. பேணது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணு தமையல கண்.

[இதுவு மது.]

(இ - ள்.) பேணாது பெட்பவே செய்யினும்-நம்மை யவமதித் துத் தான் வேண்டியனவே செய்யுமாயினும்; கொண்கனைக் கண் காணாது அமையல் - கொண்கனை என் கண்கள் காணா தமைகின்றன வில்லை.

தன் விதுப்புக் கண்மே லேற்றப்பட்டது. அத்தன்மையேன் அவனோடு புலக்குமா றென்னை யென்பதாம். (ங)

கஉஅச. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) தோழி - தோழி! ஊடற்கண் சென்றேன் - காத லரைக் காணுமுன் அவர் செய்த தவற்றைத் தன்னொடு நினைந்து யா னவரோ டூடுதற்கண்ணே சென்றேன்; என்னெஞ்சு அது மறந்து

கூடற்கண் சென்றது - கண்டபின் என்னெஞ்சு அதனை மறந்து கூடுதற்கண்ணே சென்றது.'

சேறனிகழ்தல் நினைத்த நெஞ்சிற்கு மொத்தலின், 'அது மறந்' தென்றாள். அசசெலவாற் பயனென்னென்பதுபட நின்றமையின் 'மன்' ஒழியிசைக்கண் வந்தது. அவ்வெல்லையிலே நெஞ்சு அறை போகலான், அது முடிந்ததில்லை யென்பதாம். (ச)

கஉஅரு. எழுதுங்காற்கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

[இதுவு மது.]

(இ - ள்.) எழுதுங்கால் கோல் காணுக் கண்ணேபோல்-முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதுங் காலத்து அஞ்சனக் கோலினியல்பு காணமாட்டாத கண்ணேபோல; கொண்கன் பழி கண்ட விடத்துக் காணேன் - கொண்கனது தவறு காணுத விடத்தெல்லாங் கண்டிருந்து அவனைக் கண்டவிடத்துக் காணமாட்டேன்.

'கோல்' ஆகுபெயர். இயல்பு, கருமை. என்னியல் பிதுவாக லின் மேலும் அது முடியா தென்பதாம். (ரு)

கஉஅசு. காணுங்காற் காணேன் றவருய காணுக்காற்
காணேன் றவறல் லவை.

[இதுவு மது.]

(இ - ள்.) காணுங்கால் தவருய காணேன்-கொண்கனை யான் காணும்பொழுது அவன் றவருயவற்றைக் காண்கின்றிலேன்; காணுக்கால் தவறல்லவை காணேன் - காணுதபொழுது அவையே யல்லது பிறவற்றைக் காண்கின்றிலேன்.

செயப்படுபொருள் அதிகாரத்தான் வந்தது. முன்பு நான் நின்னெடு சொல்லிய தவறுகள் இதுபொழுது காணுமையிற் புலந்திலேனென்பதாம். (சு)

கஉஅஎ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

[இதுவு மது.]

(இ - ள்,) உய்த்தல் அறிந்து புனல் பாய்பவரேபோல்-தம்மை யீர்த்துக்கொண்டு போத லறிந்துவைத்து ஒழுகுகின்ற புனலுட் பாய்வார் செயல்போல; பொய்த்தல் அறிந்து புலந்து என் - புலவி முடிவு போகாமை யறிந்துவைத்துக் கொண்கனெடு புலந்து பெறுவ தென்?

'பாய்பவ' ரென்பது ஆகுபெயர். 'பொய்த்தல்', புணைபடுதல். புலந்தாலும் பயனில்லை யென்பதாம். மொய்த்த லறிந்தே னென்பது பாடமாயின், உய்த்தலறிய ஓடு நீருட் பாய்வார்போல முடிவறியப் பண்டொருகாற் புலந்து முடியாமை யறிந்தேன்; இனி அது செயற் பாற் றன்றெண வுரைக்க. (எ)

கஉஅஅ. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

[தலைமகள் புணர்ச்சிவிதுப் பறிந்த தோழி தலைமகற்குச் சொல்லியது.]

(இ-ள்.) கள்வ - வஞ்சகா! களித்தார்க்கு இளித்தக்க இன்னா செயினும் கள்ளற்றே - தன்னை யுண்டு களித்தார்க்கு இளிவரத் தக்க இன்னாதவற்றைச் செய்யினும், அவரால் மேன்மேல் விரும்பப் படுவதாய கள்ளுப்போலும்; நின் மார்பு - எங்கட்கு நின் மார்பு.

அவ் வின்னாதன நாணின்மை நிறையின்மை, ஒழுக்கமின்மை, உணர்வின்மை யென் றிவை முதலாயின. எங்கட்கு நாணின்மை முதலியவற்றைச் செய்யுமாயினும் எங்களால் மேன்மேல் விரும்பப் படாநின்ற தென்பதாம். 'கள்வ' வென்றதும் அதுநோக்கி. (அ)

கஉஅகூ. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.

[உணர்ப்புவயின் வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.]

(இ-ள்.) காமம் மலரினும் மெல்லிது - காம வின்பம் மலரினு மெல்லிதாயிருக்கும்; அதன் செவ்வி தலைப்படுவார் சிலர் - அங்ஙனம் மெல்லிதாதலை யறிந்து அதன் செவ்வியைப் பெறுவார் உலகத்துச் சிலர்.

தொட்டதுணையானே மணச்செவ்வி யழிவதாய மலர் எல்லா வற்றினும் மெல்லிதென்பது விளக்கலின், உம்மை சிறப்பின்கண் வந்தது. குறிப்பும், வேட்கையும், நுகர்ச்சியும், இன்பமும் ஒரு காலத்தின்கண்ணே யொத்து நுகர்தற்குரியா ரிருவர் அதற்கேற்ற இடனுங் காலமும் உபகரணங்களும் பெற்றுக்கூடி நுகரவேண்டு தலின் 'அதன் செவ்வி தலைப்படுவார்' சிலரென்றும், அவற்றுள் யாதானு மொன்றனுற் சிறிது வேறுபடினும் வாடுதலின், 'மலரினு மெல்லி' தென்றுங் கூறினன். குறிப்பொவ்வாமையின் யானது பெறுகின்றிலே னென்பதாம். தலைமகி ளூடறீர்வது பயன். (கூ)

கஉகூ0. கண்ணிற் றுனித்தே கலங்கினள் புல்லுத
லென்னினுந் தான்விதுப் புற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) கண்ணின் துனித்தே-காதலி முன்னொரு ஞான்று புல்லல் விதுப்பினுற் சென்ற என்னொடு தன் கண் மாத்திரத்தா னூடி; புல்லுதல் என்னினும் தான் விதுப்புற்றுக் கலங்கினள் - புல்லுதலை என்னினுந் தான் விதும்பலான் அதுதன்னையும் அப் பொழுதே மறந்து கூடிவிட்டாள்; அதனுல் யா னித்தன்மையே னுகவும் விதுப்பின்றி யூடிநிற்கின்ற விவள் அவளல்லள்.

கண்மாத்திரத்தா னூடல், சொன்னிகழ்ச்சியின்றி அது சிவந்த துணையேயாதல். அவளாயின் இங்ஙனை மூடற்க ணீடாளென்பது பயன். (க0)

---

## அதி. கஉ0—நெஞ்சொடு புலத்தல்

[அஃதாவது, காரண முண்டாயவழியும் புலக்கக் கருதாது புணர்ச்சி விதும்புகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தலும் தலைமகன் புலத்தலுமாம். அதிகார முறைமையும் இதனுனே விளங்கும்.]

கஉகூக. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.

[தலைமகன்கட் டவறுண்டாயவழியும் புலவி கருதாத நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே! அவர் நெஞ்சு அவர்க்கு ஆதல் கண்டும் - அவருடைய நெஞ்சு நம்மை நினையாது அவர்க்காய் நிற்றல் கண்டுவைத்தும்; நீ எமக்கு ஆகாதது எவன் - நீ யெமக்காய் நில் லாது அவரை நினைத்தற்காரணம் யாது?

அவர்க்காதல்: அவர் கருதியதற் குடம்படுதல். எமக்காகாத தென்றது புலவிக் குடம்படாமையை. ஒரு கருமத்தைத் தாமாக வறிந்து செய்யமாட்டாதார் செய்வாரைக் கண்டாயினுஞ் செய்வர்; நீ யதுவுஞ் செய்கின்றிலை யென்பதாம். (க)

கஉகூஉ. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) என்னெஞ்சு- என்னெஞ்சே! உறாஅதவர்க் கண்ட கண்ணும் - மேலும் நம்மாட் டன்புடைய ராகாதவரை உள்ளவா றறிந்தவிடத்தும்; செறாஅரென அவரைச் சேறி - நாஞ் சென்றால் வெகுளாரென்பதுபற்றி நீ யவர்மாட்டுச் செல்லா நின்றாய், இப் பெற்றியதுமேலு மோ ரறியாமை யுண்டோ!

'அவரை' யென்பது வேற்றுமை மயக்கம். பழங்கண்ணோட் டம்பற்றி வெகுளாரென்பது கந்தாகச் சென்றாய், நீ கருதியது முடி யுமோ வென்பதாம். (உ)

கஉகூந. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ* நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே! நீ பெட்டாங்கு அவர்பின் செலல் - என்மாட்டு நில்லாது நீ விரும்பியவாறே அவர்மாட்டுச் செல்லுதற்குக் காரணம்; கெட்டார்க்கு நட்டார் இல்லென்பதோ - கெட்டார்க்கு நட்டார் உலகத்திலில்லை யென்னு நினைவோ நின் னியல்போ கூறுவாயாக.

என்னைவிட்டு அவர்மாட்டுச் சேறல் நீ பண்டே பயின்ற'தென் பான் 'பெட்டாங்' கென்றும், தா னிதுபொழுது மானமிலளாகலிற் 'கெட்டாரீக்' கென்றுங் கூறினாள். 'பின்' னென்பது ஈண்டிடப் பொருட்டு. 'செல' லென்பது ஆகுபெயர். "ஒல்கிடத் துலப் பிலா வுணர்விலார் தொடர்"† பாயிற்று நின்றொடர் பென்பதாம். (ந)

கஉகூச. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) நெஞ்சே - நெஞ்சே! துனி செய்து மற்றுத் துவ் வாய் - நீ யவரைக் கண்டபொழுதே இன்பநுகரக் கருதுவதல்லது அவர் தவறு நோக்கி முன் புலவியை யுண்டாக்கி அதனை யள வறிந்து பின்னுகரக் கருதாய்; இனி அன்ன நின்னொடு சூழ்வார் யார் - ஆகலான் இனி யப்பெற்றிப்பட்டவற்றை நின்னோ டெண்ணு வார் யார்? யானது செய்யேன்.

அப்பெற்றிப்பட்டன புலக்குந் திறங்கள். 'கா'ணென்பது உரையசை. 'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. முன்னெல்லாம்

---

* பழமொழி - கஉச. † கலித்தொகை - உரு

புலப்பதாக் கெண்ணியிருந்து பின் புணர்ச்சி விரும்பலின், இவ்வாறு கூறினாள். (ச)

கஉகூரு. பெருஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
மருஅ விடும்பைத்தென் னெஞ்சு.

[வாயிலாகச் சென்ற தோழி கேட்பத் தலைமகள் சொல்லியது]

(இ - ள்.) பெருஅமை அஞ்சும் - காதலரைப் பெறாத ஞான்று அப் பெறாமைக் கஞ்சாநின்றது; பெறின் பிரிவு அஞ்சும் - பெற்றக் கால் வரக்கடவ பிரிவினை யுட்கொண்டு அதற் கஞ்சாநின்றது; என் நெஞ்சு அருஅ இடும்பைத்து - ஆகலான், என்னெஞ்சம் எஞ் ஞான்றும் நீங்காத விடும்பையை யுடைத்தாயிற்று.

காதலரைப் பெற்று வைத்துக் கலவியிழத்தல் உறுதியன் றென் னுங் கருத்தான் வாயினேர்கின்றா ளாகலிற் 'பெருஅமை யஞ்சு' மென்றும், கலவியாராமையின் இன்னுமிவர் பிரிவாராயின் யாது செய்து மென்பது நிகழ்தலிற் 'பெறிற் பிரிவஞ்சு' மென்றும், இவ்விரண்டு மல்லது பிறிதின்மையின் எஞ்ஞான்று 'மருஅ விடும் பைத்' தென்றுங் கூறினாள். (ரு)

கஉகூசு. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய விருந்ததென் னெஞ்சு.

[இதுவு மது.]

(இ - ள்.) என்னெஞ்சு இருந்தது - என்னெஞ்சு ஈண்டிருந் தது; தனியே இருந்து நினைத்தக்கால் - காதலரைப் பிரிந்திருந்து அவர் கொடுமைகளை யான் றன்னொடு நினைத்தக்கால்; என்னைத் தினிய - அவ்வளவறிந்து என்னைத் தின்பதுபோன்று துன்பஞ் செய்தற்கே.

எம்மாட்டிருந்தது, அன்று அவர் கொடுமைகளை யுட்கொண்டு எனக்காற்றுமை செய்தற்கே; இன்று அவை நோக்கி அவரோடு புல்த்தற்கன் றென்பதாம். (சு)

கஉகூஎ. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு.

[இதுவு மது.]

(இ - ள்.) அவர் மறக்கல்லா என் மாணா மடநெஞ்சிற்பட்டு - தன்னை மறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என் மாட்சிமை யில்லாத மடநெஞ்சுடனே கூடி; நாணும் மறந்தேன் - என்னுயிரி னுஞ் சிறந்த நாண்டன்னையும்* மறந்துவிட்டேன்.

---

* கOகஎ - ஆம் குறளுரை.

மாணமை: ஒருநிலையி னில்லாமை. மடமை கண்டவழி நினைந்து காணாதவழி மறக்குந் தவற்றைக், காணாவழி நினைந்து கண்டவழி மறத்தல். நாண்: எஞ்ஞான்றுங் கூடியொழுகினும் அஞ்ஞான்று கண்டார்போன் றொடுங்குசல். கண்டபொழுதே புணர்ச்சி விதும்பலின், அதனையு 'மறந்தே' னென்றான். (எ)

கஉகஅ. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
முள்ளு முயிர்க்காத னெஞ்சு.

[இதுவு மது]

(இ - ள்.) உயிர்க் காதல் நெஞ்சு - உயிர்மேற் காதலையுடைய என்னெஞ்சு; எள்ளின் இளிவு ஆம் என்று எண்ணி - நம்மை யெள்ளிச் சென்றாரென்று நாமு மெள்ளுவேமாயிற் பின் னமக் கிளிவாமென்று கருதி; அவர் திறம் உள்ளும் - அவர் திறத்தினையே நினையாநின்றது.

எள்ளுதல்: வாயின் மறுத்தல். இளிவு: வழிபடாமையானும், பிரிவாற்றாமையானும், நாணும் நிறையு முதலிய விழத்தலானும் உளதாவது. திறம்: வாயினேர்தலும், வருதலும் கூடலு முதலாயின. இளிவிற் கஞ்சுதலானும் இறந்துபட மாட்டாமையானும் கூடக் கருதாநின்ற தென்பதாம். (அ)

கஉகக. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சந் துணையல் வழி.

[உணர்ப்புவயின் வாரா வூடற்கட் டலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) துன்பத்திற்கு - ஒருவருக்குத் துன்பம் வந்துழி அது நீக்குதற்கு; தாம் உடைய நெஞ்சம் துணையல்வழி - தாமுரித் தாகப் பெற்ற தம்முடைய நெஞ்சந் துணையாகாவழி; துணையாவார் யாரே - வேறு துணையாவார் ஒருவரு மில்லை.

ஈண்டுத் 'துன்ப' மாவது ஊடலுணர்ப்புவயின் வாராமை. அதற்கு 'நெஞ்சந் துணை' யாகாமையாவது, அவளை யன்பிலளென் றொழியாது கூடற்கண்ணே 'விதும்பல்' ஒரு துணையு மின்மையின் இஃதுற்றுவிடுதலே யுள்ள தென்பதாம். (கூ)

கரு00. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
நெஞ்சந் தமரல் வழி.

[இதுவு மது.]

(இ - ள்.) தாம் உடைய நெஞ்சம் தமர் அல்வழி - தாமுரித்தாக வுடைய நெஞ்சம் ஒருவர்க்குத் தமரல்லாவழி; ஏதிலார் தமர் அல்லர் தஞ்சம் - அயலார் தமரல்லராதல் சொல்லவேண்டுமோ?

பிற ளொருத்தியைக் காதலியென்று கருதி என்னெஞ்சே, என்னை வருத்தாநின்றபின் அப் பிறள் புலக்கின்ற தெளிதென்ப தாம். (கய)

---

## அதி. கஙௗக—புலவி

[அஃதாவது, இருவர் நெஞ்சும் புணர்ச்சி விதும்பாது புலக்கக் கருதியவழி ஒருவரோடொருவர் புலத்தல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.]

கஙௗ0க. **புல்லா திராஅப் புலத்தை யவருறு**
**மல்லனோய் காண்கஞ் சிறிது.**

[வாயிலாகச் சென்ற தோழி தலைமகள் வாயி னேர்தற்பொருட்டு அவளொடு நகையாடிச் சொல்லியது.]

(இ - ள்.) அவர் உறும் அல்லல் நோய் சிறிது காண்கம்-அங்ஙனம் புலந்தாற் காதல ரெய்து மல்லனோயினை யாஞ் சிறிது காணக்கடவேம்; புல்லாது இராஅப் புலத்தை - நீ யவரை விரைந்து சென்று புல்லாதே இத் தொழிலை மேலிட்டுக்கொண்டிருந்து புலப்பாயாக.

'அல்லனோய்' : துன்பத்தைச் செய்யுங் காம நோய். 'சிறிது' தென்றாள், புலவியை நீளவிடலாகா தென்பதுபற்றி. 'புலத்தை' யென்புழி ஐகாரம் "கடம்பூண் டொருகா னீவந்தை"* என்புழிப்போல முன்னிலைவினை விகுதி. புலத்தி யென்பதூஉம் பாடம். புலவிக்குறிப்புக் கண்டு அவள் வழியளாய் நின்று காமுற்ற வருத்தம் அவருஞ் சிறிதுற்றறிதல் வேண்டுமென நகையாடி நேர்வித்தவாறு. (க)

கஙௗ0உ. **உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது**
**மிக்கற்றா னீள விடல்.**

[புலவியொழிந்து வாயினேரும்வகை அவள் சொல்லியது.]

(இ - ள்.) புலவி உப்பு அமைந்தற்று - புலவி கலவி இன்பஞ் செயற்கு வேண்டுமளவிற்றாதல், உப்புத் துய்ப்பனவற்றை இன்

* கலித்தொகை - சுஙௗ.

சுவைய வாக்கற்கு வேண்டுமளவிற்றாதல்போலும்; சிறிது நீளவிடல் அது மிக்கற்று - இனி, அதனை யவ்வளவிற் சிறிது மிக விடுதல் அவ் வுப்பு அளவின் மிக்காற்போலும்.

'நீளவிடல்': அளவறிந்துணராது கலவிமே லெழுந்த குறிப் பழுங்குமளவுஞ் செய்தல், 'சிறிது நீளவிட' லாகாதென்றாள், நேர் விக்கின்றாளாகலின். உப்பு மிக்க வழித் துய்ப்பது சுவையின்றானாற் போலப் புலவி மிக்கவழிக் கலவி இன்பமின்றா மென்றமையின் இது பண்புவமை. (உ)

கசூ0௩. அலந்தாரை யல்லனோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல்.

[பரத்தையரிடத்துநின்றும் வந்த தலைமகனொடு
தலைமகள் புலந்து சொல்லியது.]

(இ - ள்.) தம்மைப் புலந்தாரைப் புல்லாவிடல் - தம்மைப் பெறாது புலந்த மகளிரைப் புலவி நீக்கிக் கலவாது ஆடவர் சேறல்; அலந்தாரை அல்லல்நோய் செய்தற்று - பண்டே துன்ப முற்றழிந் தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச் செய்தாற்போலும்.

பிறர்பாற் சேறலின் நும்மைப் பெறாது புலந்தூடி யிருக்கின்ற பரத்தையரைப் போய்ப் புலவி நீக்கிப் புல்லீராயின் அவராற்றா ரென்பதாம். (௩)

கசூ0௪. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடியவரை உணராமை - நும்மோ டூடிய பரத்தை யரை ஊடலுணர்த்திக் கூடாதொழிதல்; வாடிய வள்ளி முதல் அரிந் தற்று - பண்டே நீர்பெறாது வாடிய கொடியை அடியிலே யறுத்தாற் போலும்.

நீர் பரத்தைய ரிடத்தி ராயவழி எம் புதல்வரைக் கண்டாற்றி யிருக்கற்பாலமாய யாம் நும்மோ டூடுதற் குரியமல்லம்; அன்மையின் எம்மை யுணர்த்தல் வேண்டா; உரியரா யூடிய பரத்தையரையே யுணர்த்தல் வேண்டுவது; அதனால், ஆண்டுச் சென்மி னென்பதாம்.

கசூ0௫. நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

[தலைமகளைப் புலவிநீக்கிக் கூடிய தலைமகன் றன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) நலத்தகை நல்லவர்க்கு ஏஎர் - நற்குணங்களாற் றகுதியுடையராய தலைவர்க்கும் அழகாவது; பூ அன்ன கண்ணார் அகத்துப் புலத்தகை - தம் பூவன்ன,கண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவி மிகுதியன்றே.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான், 'நலத்தகை நல்லவர்க்கு' மென்றான். அழகு இன்பப் பயனைத் தலைப்படுதல். தானுகர்ந்த வின்பத்திற் கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு. (ரு)

கங0சு. துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.

[இதுவு மது.]

(இ - ள்.) துனியும் புலவியும் இல்லாயின் - முதிர்ந்த கலாமாகிய துனியும், இளைய கலாமாகிய புலவியும் இல்லையாயின்; காமம் கனியும் கருக்காயும் அற்று-காமம் செவ்வி முதிர்ந்த பழமும் இளங்காயும்போலும்.

மிகமுதிர்ந் திறமெல்லைத்தாய கனி நுகர்வார்க்கு மிகவு மினிமை செய்யாதாதலின் துனியில்லையாயிற் 'கனியற்'றென்றும், கட்டிளைமைத்தாய காய் நுகருஞ் செவ்வித்தன்றாகலிற் புலவியில்லையாயிற் 'கருக்காயற்'றென்றுங் கூறினாள். இவ்விரண்டும் வேண்டுமென்று வியந்து கூறியவாறு. (சு)

கங0எ. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) புணர்வது நீடுவது (கொல்) அன்றுகொல் என்று - இனிப் புணர்ச்சி,நீட்டிக்குமோ நீட்டியாதோ வென்று கருதலான்; ஊடலின் ஓர் துன்பம் உண்டு - இன்பத்திற் கின்றியமையாத ஊடலின்கண்ணேயும் ஒரு துன்ப நிகழும்.

'என்' றென்னு மெச்சத்திற்குக் கருதலா னென்பது வருவிக்கப் பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. 'கொல்' லென்பதனை நீடுவதென்பதனுடனுங் கூட்டுக. ஆங் கென்பது அசைநிலை. ஊடல் கூடற்கண் விரைவித்தல் கூறியவாறு. (எ)

கங0அ. நோதல் எவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.

[உணர்ப்புவயின்வாரா வூடற்கட் டலைமகன் தலைமகளோடு
புலந்து சொல்லியது.]

(இ - ள்.) நொந்தாரென்று அஃது அறியும் காதலர் இல்லா வழி - இவர் நம்பொருட்டாக நொந்தாரென்று அந் நோயினையறியு மன்புடையாரைப் பெறுவழி; நோதல் மற்று எவன் - ஒருவர் நோகின்றதனாற் பயனென்?

அறிதல்: ஈண் டுடலை யினிதுணர்தல். 'மற்று' வினைமாற்றின் கண் வந்தது. இவள் நங் காதலியல்லள்; அன்மையின் இந்நோவறி யாள்; அறியாமையின் நாம் புலக்கின்றதனாற் பயனில்லை யெனத் தன்னாற்றாமை யுணர்த்தியவாறு. (அ)

கங0கூ. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.

[இதுவு மது.]

(இ - ள்.) நீரும் நிழலதே இனிது - உயிர்க் கின்றியமையாத நீரும் நிழலின்கண்ணதே இனிதாவது, ஏனை வெயிலின்கண்ணது ஆகாது; புலவியும் வீழுநர்கண்ணே இனிது - அதுபோலக் கலவிக் கின்றியமையாத புலவியும் அன்புடையார்கண்ணே இனிதாவது, ஏனை யன்பிலார்கண் ஆகாது.

நிழற்கணிருந்த நீர் குளிர்ச்சிமிக்குத் தாகந் தணித்தலின் 'இனி' தாயிற்று. வீழுநர் ஆற்றாமைக்கு நோதலுங் கூடுதற்கண் வேட்கையு முடையராவார். இவள் நம்மாட்டு அவ்விரண்டு மின்மையின் இப் புலவிதானு மின்னாதாகாநின்ற தென்பதாம். (கூ)

கஙக0. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சம்
கூடுவே மென்ப தவா.

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடல் உணங்க - தானூடற்கண்ணே மெலியா நிற்கவும்; விடுவாரோடு கூடுவேம் என்பது என்னெஞ்சம் அவா - விட்டிருக்கவல்லாரோடு கூடக்கூடுவேமென்று என்னெஞ்சம் முயறற்கேது தன்னவாவே, பிறிதில்லை.

அன்பு மருளு மில்லாதாரை உடையரென்றும், அவரோடியாங் கூடுவமென்றுங் கருதி அதற்கு முயறல் அவாவுற்றார்செயலாகலின்,

'கூடுவே மென்ப தவா' வென்றான். காரியங் காரணமாக வுபசரிக்கப் பட்டது. இக்கூட்டம் முடியா தென்பதாம். (கo)

---

## அதி. கங உ—புலவி நுணுக்கம்

[அது புலவியது நுணுக்கமென விரியும். அஃதாவது, தலைமகனுந் தலைமகளும் ஓரமளிக்கட் கூடியிருந்துழி அவன்மாட்டுப் புலத்தற்காரணை யில்லையாகவுங் காதல் கைம்மிகுதலான் நுண்ணிய தோர்காரண முளதாக வுட்கொண்டு அதனை யவன்மேலேற்றி அவள் புலத்தல். காரணத்தி னுணுக்கம் காரியத்தின்மே னின்றது. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

கஙகக. **பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்**
**நண்ணேன் பரத்தநின் மார்பு.**

[உலாப்போய் வந்த தலைமகன் பள்ளியிடத்தானாகத் தலைமகள் சொல்லியது.]

(இ - ள்.) பரத்த - பரத்தமையுடையாய்! பெண்ணியலார் எல்லாரும் கண்ணிற் பொதுவுண்பர் - நின்னைப் பெண்ணியல் பினையுடையார் யாவருந் தங் கண்ணாற் பொதுவாக வுண்பர்; நின் மார்பு நண்ணேன் - அதனால் அவர் மிச்சிலாய நின் மார்பினைப் பொருந்தேன்.

கற்பு நாண் முதலிய நற்குணங்க ளின்மையிற் பரத்தையர்க் குள்ளது பெண்ணியற்கை மாத்திரமே யென்னுங் கருத்தாற் 'பெண் ணியலா' ரென்றாள். பொதுவாக வுண்டல், தஞ் சேரிச் செலவின் முறையானன்றி ஒருகாலத் தொருங்கு நோக்குதல்; அதுவு மோர் குற்றம். தா நோக்கி யின்புற்றவாறே அவரு நோக்கி யின்புறுவ ரென ஆசங்கித்து அவர்பாற் பொறாமை யெய்துதலின் நுணுக்க மாயிற்று. (க)

கஙகஉ. **ஊடி யிருந்தேமாத் தும்மினா் யாந்தம்மை**
**நீடுவாழ் கென்பாக் கறிந்து.**

[தலைமக னீக்கத்துச் சென்ற தோழிக்குத் தலைமகள் பள்ளியிடத்து நிகழ்ந்தது கூறியது.]

(இ - ள்.) ஊடி இருந்தேமாத் தும்மினார் - யாந் தம்மோடூடி யுரையாடா திருந்தேமாகக் காதலர் தும்மினார்; யாம் தம்மை நீடு வாழ்கென்பாக்கு அறிந்து - அது நீங்கித் தம்மை நீடு வாழ்கென் றுரையாடுவேமாகக் கருதி.

தும்மியக்கால் வாழ்த்துதல் மரபாகலான், உரையாடல்வேண்டிற் றென்பதாம். இயல்பானிகழ்ந்த தும்மலைக் குறிப்பா னிகழ்ந்ததாகக் கோடலின் நுணுக்கமாயிற்று. (உ)

கரு-கரு. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

[தலைமகள் புலவிக்குறிப்பினைக் கண்டு நீவிர் கூடியொழுகா நிற்கவும் இது நிகழ்தற்குக் காரணம் யாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது.]

(இ - ள்.) கோட்டுப்பூச் சூடினும் - யான் கோடுதலைச் செய்யு மாலையைச் சூடினேனாயினும்; ஒருத்தியைக் காட்டிய சூடினீர் என்று காயும்-நும்மாற் காதலிக்கப்பட்டா ளொருத்திக்கு இப்பூவணி காட்டல்வேண்டிச் சூடினீ ரென்று வெகுளாநிற்கும்; இத்தன்மை யாட்கு ஒரு காரணம் வேண்டுமோ?

கோடென்பது முதனிலைத் தொழிற்பெயர்; பூ ஆகுபெயர் வளையமாகச் சூடினு மென்பதாம்; "கோட்டங் கண்ணியுங் கொடுந் திரை யாடையும்"* என்றார் பிறரும். இனி அம்மருத நிலத்துப் பூவன்றி வேற்றுநிலத்துக் கோட்டுப்பூவைச் சூடினேனாயினும் ஈண் டையாள் பிற ளொருத்திக்கு அவ்வேற்றுப்பூவணி காட்டல் வேண் டிச் சூடினீரென்று வெகுளு மெனினு மமையும். (ங)

கரு-கச. யாரினுங் காதலமென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) யாரினும் காதலம் என்றேனா - காமநுகர்தற்குரிய விருவராயினார் யாவரினும் யாம் மிக்க காதலையுடையேமென்பது கருதி யாவரினுங் காதலமென்றேனாக; யாரினும் யாரினும் என்று ஊடினாள் - நின்றோழி அது கருதாது, ஏனைற் காதலிக்கப்பட்ட மகளிர் பலருள்ளும் நின்கட் காதலுடையே னென்றேனாகக் கருதி, அம் மகளிர் யாரினும் என்கட் காதலுடையராயினீ ரென்று சொல் லிப் புலந்தாள்.

தலைமகள் கருத்திற்குத் தன்மைப்பன்மை உயர்ச்சிக்கண் வந்தது. யானன்பு மிகுதியாற் சொல்லியதனைக் கருத்து வேறுபடக் கொண்ட தல்லது பிறிது காரணமில்லை யென்பதாம். (ச)

[இதுவு மது.]

கரு-கரு. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

* புறநானூறு - உஎகு.

(இ - ள்.) இம்மைப் பிறப்பிற் பிரியலம் என்றேனா - காதன் மிகுதியான் இம்மையாகிய பிறப்பின்கண் யாம் பிரியே மென்று சொன்னேனாக; கண் நிறை நீர்கொண்டனள் - அதனான் ஏனை மறுமையாகிய பிறப்பின்கட் பிரிவலென்னுங் குறிப்பினேனாகக் கருதி, அவள் தன் கண்ணிறைந்த நீரினைக் கொண்டாள்.

வெளிப்படு சொல்லைக் குறிப்புச் சொல்லாகக் கொள்கின்ற தல்லது என்பாற் றவறில்லை யென்பதாம். (ரு)

கரு௩சு. உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்
புல்லாள் புலத்தக் கனள். [னைப்

[இதுவு மது.]

(இ - ள்.) உள்ளினேன் என்றேன் - பிரிந்தகாலத்து நின்னை யிடையின்றி நினைந்தே னென்னுங் கருத்தால் யானுள்ளினே னென்றேன்; மற்று என் மறந்தீர் என்று என்னைப் புல்லாள் புலத்தக் கனள் - என, அதனை ஒருகால் மறந்து பின்னினைந்தே னென்ற தாகக் கருதி, என்னை யிடையே மறந்தீரென்று சொல்லி முன் புல்லுதற்கமைந்தவள் அஃதொழிந்து புலத்தற்கமைந்தாள்.

'மற்று' வினைமாற்றின்கண் வந்தது. அருத்தாபத்தி வகையான் மறத்தலை யுட்கொண்டு புலந்தா ளென்பதாம். (சு)

கரு௩எ. வழுத்தினா டும்மினே னாக வழித்தழுதாள்
யாருள்ளித் தும்மினீ ரென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தும்மினேனாக வழுத்தினாள் - கூடியிருக்கின்றவள் யான் றும்மினேனாகத் தன்னியற்கைபற்றி வாழ்த்தினாள்; அழித்து யார் உள்ளித் தும்மினீர் என்று அழுதாள் - அங்ஙனம் வாழ்த்திய தனை மறித்து, நும்மை நினைத்து வருந்துகின்ற மகளிருள் யாவர் நினைத்தலாற் றும்மினீரென்று சொல்லிப் புலந்தழுதாள்.

வாழ்த்தலொடு புலத்தல் இயையாமையின், 'அழித்' தென்றான். அன்புடையார் நினைத்தவழி அந் நினைக்கப்பட்டார்க்குத் தும்ம றோன்று மென்பது மகளிர் வழக்கு. இவ்வழக்கை உள் வழக்காகக் கருதிப் புலந்தாளென்பதாம். (எ)

கரு௩அ. தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
லெம்மை மறைத்திரோ வென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தும்முச் செறுப்ப - எனக்குத் தும்மறேன்றியவழி (யாருள்ளித் தும்மினீ ரென்று புலத்தலை யஞ்சி அதனை யானடக்கினேன்) அங்ஙன மடக்கவும்; நுமர் உள்ளல் எம்மை. மறைத்திரோ என்று அழுதாள் - நுமர் நும்மை நினைத்தலை எம்மை மறைக்கலுற் றீரோ வென்று சொல்லிப் புலந்தழுதாள்.

'தும்மு' வென்பது முதனிலைத் தொழிற்பெயர். 'செறுப்ப' வென்புழி இறந்ததுதழீஇய வெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. 'எம்மை' யென்பது நும்மோ டியாது மியைபில்லாத வெம்மை யென் பதுபட நின்ற இசையெச்சம். இதனை வடநூலார் காகு வென்ப. தும்மினுங் குற்றம் ஒழியினுங் குற்ற மாயக்காற் செயற்பால தியா தென்பதாம். (அ)

கஙகக. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
நீநீர ராகுதி ரென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) தன்னை உணர்த்தினுங் காயும் - இவ்வாற்றானூடிய தன்னை யான் பணிந்துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும்; பிறர்க்கும் நீர் இந்நீரர் ஆகுதிர் என்று-பிற மகளிர்க்கும் நீர் அவரூடியவழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையை யுடையீ ராகுதி ரென்று சொல்லி.

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பது பற்றி என்மே லேற்றியு தவிற்றை உடம்பட்டுப் பணிந்தேன்; பணிய அதுதானும் புலத்தற்கே துவாய் முடிந்தது; இனி, யிவண்மாட்டுச் செய்யத்தகுவ தியா தென்பதாம். (க)

கஙஉ0. நினைந்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.

[இதுவு மது.]

(இ - ள்.) நினைத்து இருந்து நோக்கினும் காயும் - என் சொற்களுஞ் செயல்களும் பற்றித் தான் வெகுடலான், அவற்றை யொழிந்திருந்து தன்னவயவங்களது தொப்பின்மையை நினைந்து அவற்றையே நோக்கினும், என்னை வெகுளாநிற்கும்; அனைத்தும் நீர் நோக்கினீர் யார் உள்ளி என்று - என் னவயவமனைத்தும் நோக்கினீர் அவற்ற தொப்புமையான் எம் மகளிரை நினைந்தென்று சொல்லி.

யான் எல்லா வவயவங்களானும் ஒருத்தியோ டொத்தல் கூடாமை யின் ஒன்றா லொருவர்ராகப் பலரையு நினைக்கவேண்டும்; அவ ரெல்லாவிரயும் யானறியச் சொல்லுமி னென்னுங் கருத்தால், 'அனைத்து நோக்கினீர் யாருள்ளி' யென்றாள். வாளாவிருத்தலும் குற்றமாயிற் றென்பதாம். (௧௦)

---

## அதி. ௧௩௩—ஊடலுவகை

[அஃதாவது, அப்பெற்றித்தாய வூடலாற் றமக்குக் கூடலின்பஞ் சிறந்துழி அச்சிறப்பிற்கேதுவாய அவ்வூடலைத் தலைமக ளுவத்தலும் தலைமக னுவத்தலுமாம். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.]

௧௩௨௧. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு.

[தலைமகள் காரணமின்றிப் புலக்கின்றமை கேட்ட தோழி அங்ஙன நீ புலக்கின்ற தென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(இ - ள்.) அவர்க்குத் தவறு இல்லையாயினும் - அவர்மாட்டுத் தவறில்லையாயினும்; அவர் அளிக்குமாறு ஊடுதல் வல்லது - நமக் கவர் தலையளி செய்கின்றவாறு அவரோ டூடுதலை விளைக்க வற்றா கின்றது.

'அவர்க்'கென்பது வேற்றுமை மயக்கம். அளவிறந்த வின்பத்த ராகலின் யானெய்தற்பாலதாய இத்தலையளி ஒழிந்தாரு மெய்துவ ரெனக் கருதி அது பொறாமையான் ஊட னிகழாநின்றதென்பதாம். (௧)

௧௩௨௨. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி
வாடினும் பாடு பெறும்.

[புலவாக்காலும் அத்தலையளி பெறலாயிருக்க அஃதிழந்து புலவி யான் வருந்துவதென்னை யென்றாட்கு அவள் சொல்லியது.]

(இ - ள்.) ஊடலின் தோன்றும் சிறுதுனி - ஊடலேதுவாக நங்கட் டோன்றுகின்ற சிறிய துனிதன்னால்; நல்லளி வாடினும் பாடு பெறும் - காதலர் செய்யு நல்ல தலையளி வாடுமாயினும், பெருமை யெய்தும்.

தவறின்றி நிகழ்கின்ற வூடல் கடிதி னீங்கலின் அத் துன்ப மில்லாதென்பாள் 'சிறுதுனி' யென்றும், ஆராமைபற்றி நிகழ்தலின் அதனான் நல்லளி வாடாதென்பாள் 'வாடினு' மென்றும், பின்னே

பேரின்பம் பயக்குமென்பாள் 'பாடுபெறு' மென்றுங் கூறினன். அது வருத்த மெனப்படா தென்பதாம். (உ)

**கஙௗஉங. புலத்தலிற் புத்தேளு டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்ன ரகத்து.**

[இதுவு மது.]

(இ - ள்.) நிலத்தொடு நீர் இயைந் தன்னாரகத்துப் புலத்தலின் - நிலத்தொடு நீர் கலந்தாற்போல ஒற்றுமையுடைய காதலர்மாட்டுப் புலத்தல்போல; புத்தேள் நாடு உண்டோ - நமக்கின்பந் தருவ தொரு புத்தேளுலக முண்டோ? இல்லை.

நீர் தானின்ற நிலத்தியல்பிற்றுமாறு போலக் காதலருந் தாங் கூடிய மகளி ரியல்பினராகலான் அதுபற்றி அவரோடு புலவி நிகழு மென்பாள் 'நிலத்தொடு நீரியைந் தன்னா ரகத்' தென்றும், அவர் நமக்கும் அன்னராகலின் அப் புலவி பின்னே பேரின்பம் பயவா நின்றதென்பாள் 'புலத்தலிற் புத்தேளுடுண்டோ' வென்றுங் கூறினாள். உவமம் பயன்பற்றி வந்தது. (ங)

**கஙௗஉச. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
னுள்ள முடைக்கும் படை.**

[அப்புலவி இனி யாதா னீங்கு மென்றாட்குச் சொல்லியது.]

(இ - ள்.) புல்லி விடாஅப் புலவியுள் தோன்றும் - காதலரைப் புல்லிக்கொண்டு பின் விடாமைக் கேதுவாகிய அப்புலவிக்கண்ணே யுள்ளதாம்; என் உள்ளம் உடைக்கும் படை - அதன்மேற் சென்ற என்னுள்ளத்தைக் கெடுக்கும் படைக்கலம்.

'புலவியு' ளென்னு மேழாவது வினைநிகழ்ச்சிக்கண் வந்தது. என்னுள்ள முடைக்கும் படைக்கலமென்றது வணக்கத்தையும் பணி மொழியையும். படைக்கலமென்றாள், அவற்றான் அப்புலவியுள்ள மழிதலின். புலவி நீங்குந் திறங் கூறியவாறு. (ச)

**கஙௗஉரு. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்றோ
ளகறலி னுங்கொன் றுடைத்து.**

[தலைமகளை யூடனீக்கிக் கூடிய தலைமகன் கழியுவகையனாய்த் தன்னுள்ளே சொல்லியது.]

(இ - ள்.) தவறு இலராயினும் தாம் வீழ்வார் மென்றோள் அகறலின் - ஆடவர் தங்கட் டவறிலராயினும் உடையார்போல ஊடப்பட்டுத் தாம் விரும்பு மகளிருடைய மெல்லிய தோள்களைக்

கூடப்பெறாத வெல்லைக்கண்: ஆங்கு ஒன்று உடைத்து - அவர்க்கு அப்பெற்றியதோ ரின்பம் படுத்த லுடைத்து.

உடையரராயக்கால் இறந்த வின்பத்தோடு வரு மின்பமு மெய்துவ ராகலின் அது மிக நன்று; மற்றையிலராயக்காலும் வரு மின்பத்தை யிகழ்ந்ததில்லை யென்னுங் கருத்தால், 'தவறிலராயினு' 'மாங்கொன்றுடைத்' தென்றான். ஊடலினாய வின்பம் அளவிறந் தலிற் கூறற் கரிதென்பான், அப்பெற்றிய தொன்றென்றான். தவறின்றி யூடியதூஉம் எனக் கின்பமாயிற் றென்பதாம். (ரு)

**கருஉசு. உணலினு முண்ட தறலினிது* காமம்**
**புணர்தலி னூட லினிது.**

[இதுவு மது.]

(இ - ள்.) உணலினும் உண்டது அறல் இனிது - உயிர்க்கு மேலுண்பதனினும் முன்னுண்ட தறுதல் இன்பந் தரும்; காமம் புணர்தலின் ஊடல் இனிது - அதுபோலக் காமத்திற்கு மேற்புணர் தலினும் முன்னைத் தவறுபற்றி யூடுதல் இன்பந் தரும்.

காமத்திற் கென்புழிச் சாரியையும் நான்கனுருபும் விகாரத்தாற் றொக்கன. பசித்துண்ணும்வழி மிக வுண்ணலுமாய் இன்சுவைத்து மாம்; அதுபோல, அகன்று கூடும்வழி ஆராததுமாய்ப் பேரின்பத் ததுமாமெனத் தன்னனுபவம்பற்றிக் கூறியவாறு. (சு)

**கருஉஎ. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும்**
**கூடலிற் காணப் படும்.**

[இதுவு மது.]

(இ - ள்.) ஊடலின் தோற்றவர் வென்றார் - காமநுகர்தற் குரிய இருவருள் ஊடலின்கட் டோற்றவர் வென்றாராவர்; அது கூடலிற் காணப்படும் - அஃதப்பொழு தறியப்படாதாயினும், பின்னைப் புணர்ச்சியின்கண் அவரா லறியப்படும்.

'தோற்றவர்' : எதிர்த லாற்றாது சாய்ந்தவர், அவர் புணர்ச்சிக்கட் பேரின்ப மெய்தலின் 'வென்றா' ராயினார். மன்னும் உம்மும் அசைநிலை. யா னதுபொழுது சாய்தலின் இதுபொழுது பேரின் பம் பெற்றே னென்பதாம். (எ)

**கருஉஅ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்**
**கூடலிற் றோன்றிய வுப்பு.**

[இதுவு மது.]

---

* குறள் - கசஉ.

(இ - ள்.) நுதல் வெயர்ப்பக் கூடலில் தோன்றிய உப்பு - இதுபொழுது இவணுதல் வெயர்க்கும் வகை கலவியின்க ணுளதாய இனிமையை; ஊடிப் பெறுகுவங் கொல்லோ - இன்னு மொருகால் இவளூடி யாம் பெறவல்லேமோ?

கலவியது விசேடம்பற்றி 'நுதல் வெயர்ப்ப' வென்முன். இனிமை: கண்டு கேட் டுண் டுயிர்த் துற்றறிதலாறுய வின்பம். இனி அப் பேறு கூடாதெனப் பெற்றதன் சிறப்புக் கூறியவாறு. (அ)

கூஉகூ. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப*
நீடுக மன்னோ விரா.

[இதுவு மது.]

(இ - ள்.) ஒளியிழை ஊடுக மன் - ஒளியிழையினை யுடையாள் இன்னு மெம்மோ டூடுவாளாக; யாம் இரப்ப இரா நீடுக மன் - அம்மனம் அவளூடி நிற்றற்கும் அதனை யுணர்த்துதற்பொருட்டு யாமிரந்து நிற்றற்கும் காலம் பெறும் வகை இவ்விரவு விடியாது நீட்டித்தில் வேண்டுக.

'ஊடுக' 'நீடுக' வென்பன வேண்டிக்கோடற் பொருள. 'மன்' னிரண்டும் ஆக்கத்தின்கண் வந்தன. ஓகாரங்கள் அசைநிலை. கூடலின் ஊடலே யமையு மென்பதாம். (கூ)

கூகூ0. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

[இதுவு மது.]

(இ - ள்.) காமத்திற்கு இன்பம் ஊடுதல் - காமநுகர்ச்சிக் கின்பமாவது அதனை நுகர்தற்குரியராவார் ஆராமைபற்றித் தம்மு ளூடுதல்; அதற்கு இன்பம் கூடி முயங்கப் பெறின் - அவ்வூடதற் கின்பமாவது, அதனை யளவறிந்து நீங்கித் தம்முட் கூடி முயங்கு தல் கூடுமாயின், அம் முயக்கம்.

'கூடுதல்' ஒத்தவளவினராதல். முதிர்ந்த துனியாயவழித் துன்பம் பயத்தலானும், முதிராத புலவியாயவழிக் கலவியின்பம் பயவாமையானும் இரண்டற்கு மிடையாகிய வளவறிந்து நீங்குத லரிதென்பதுபற்றிக் 'கூடி முயங்கப்பெறி' னென்முன். அவ் விரண் டின்பமும் யான் பெற்றே னென்பதாம். (கூ0)

* குறள் - கூஉ0கூ.

ஈண்டுப் பிரிவினை வடநூன்மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவி யென நால்வகைத்தாக்கிக் கூறினர். அவற்றுட் செலவு பிரிவாற்றாமை யுள்ளும், ஆற்றாமை படர்மெலிந்திரங்கன் முதல் நிறையழித லீறாயவற்றுள்ளும், விதுப்பு அவர்வயின்விதும் பன் முதற் புணர்ச்சி விதும்ப லீறாயவற்றுள்ளும், புலவி நெஞ்சொடு புலத்தன் முதல் ஊடலுவகை யீறாயவற்றுள்ளும் கண்டுகொள்க. அஃதேல், வடநூலார் இவற்றுடனே சாபத்தினுய நீக்கத்தினையுங் கூட்டிப் பிரிவினை ஐவகைத்தென்றாராலெனின், அஃது, அறம் பொருளின்பு மென்னும் பயன்களுள் ஒன்றுபற்றிய பிரிவன்மையானும், முனிவராணையான் ஒருகாலத்தோர்குற்றத் துளதாவதல்லது உலகியல்பாய் வாராமையானும் ஈண் டொழிக்கப்பட்ட தென்க.

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

திருவள்ளுவர் பரிமேலழகருரை முற்றுப்பெற்றது.

---

## உரைச்சிறப்புப் பாயிரம்

திருத்தகுசீர்த் தெய்வத் திருவள் ளுவர்தங்
கருத்தமைதி தானே கருதி—விரித்துரைத்தான்
பன்னு தமிழ்தேர் பரிமே லழகனென்னு
மன்னு முயர்நாமன் வந்து.

பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள
நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ—நூலிற்
பரித்தவுரை யெல்லாம் பரிமே லழகன்
றெரித்தவுரை யாமோ தெளி.

## திருக்குறளின் சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை

---

*அசரீரி*

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கஓ வென்றதோர் சொல்.

(பொ - ரை.) *அருட்செல்வத்தையும் அதற்குத்தக்க தெய்வத் தன்மையையுமுடைய திருவள்ளுவரோடு, அவரிருத்தற்குத் தனது உருவத்தினாலே தக்க நல்ல சங்கப்பலகையிடத்து உருத்திரசன்மர் ஒருவரே ஒப்பவேறி யிருக்க வென்று கூறி, விண்ணிலிருந்து அவ் விடத்துள்ள புலவர் கருத்தையெல்லாம் ஒற்றுமை செய்யும்படி ஒரு வாக்கியம் 'ஓ' வென்று இரைந்தெழுந்தது.* (க)

*நாமகள்*

நாடா முதல்நான் மறைநான் முகன்நாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
எள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(பொ - ரை.) *பகைவரைப் புறங்கொடுக்கச்செய்து இகழ்ந்த வெற்றியை உண்டாக்கி விளங்காநின்ற இலைபோலும் வேற் படையையுடைய பாண்டிய மன்னனே! உலகத்தார் விதிவிலக்கு களை அறிந்து உய்யும் வழியை நாடி, படைப்புக்காலத்திலே அயனது நாவிலிருந்து இருக்கு முதலாகிய நான்கு வேதங்களை யும் பாடி, நடுவான காலத்திலே பாரதமாகிய வேதத்தைக் கூறி னேன்; அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே என் வாக்குத் திருக்குறளாகிய வேதத்தைச் சொல்லி வள்ளுவன் வாயின்கண்ண தாயிற்று.* (உ)

### இறையனார்

என்றும் புலரா தியாணர்நாட் செலினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்ம்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.

(பொ - ரை.) *புலவர்க்கரசனாகிய வள்ளுவன் வாயிற் பிறந்த திருக்குறளானது, எக்காலத்துந் தன்னழகு கெடாது நெடுங் காலங் கழியினும் நிலைபெற்று மலர்ந்து தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால், குறைவுபடாத செய்ய தளிர் களையுடைய கற்பகத்தினது கடவுட்டன்மை பொருந்திய உயர்வாகிய மலர்போலும்.* (௩)

### உக்கிரப்பெருவழுதியார்

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
றன்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

(பொ - ரை.) *நான்முகத்தான் தன்னுரு மறைந்து திருவள் ளுவனாகத்தோன்றி நான்கு வேதங்களினுண்மைப்பொருளை அறம் பொருள் இன்ப மென்னும் முப்பாற் பொருளாகத் தமிழிற்றந்து கூறிய திருக்குறளாய திருமுறையை (என்) தலை வணங்குக, வாய் துதிக்க, நல்ல மனம் தியானிக்க, காது கேட்க.* (௪)

### கபிலர்

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தான்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(பொ - ரை.) *மனையில் வளர்க்கப்படுகின்ற பறவைப்பேடு கள் உலக்கைப்பாட்டால் கண்ணுறங்குகின்ற வளம் பொருந்திய நாட்டையுடைய மன்னனே! திருவள்ளுவரால் அருளப்பட்ட குறள்வெண்பா மிகப் பெரிய பொருளைத் தன்னுட்கொண்டு காட்டு தல், தினையரிசியினளவுக்கும் போதாத சிறிய புல்லினது நுனியின்க ணுள்ள பனிநீர் உயர்ந்த பனையினளவான அதன் சாயையைத் தன் னுட்கொண்டு காட்டுங் குணம்போலுங் குணத்தை யுடைத்து.* (௫)

### பரணர்

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞால முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து.

(போ - ரை.) *திருமாலுங் குறளாய்ப் பிறந்து வளர்ந்து இரண்டு பெரிய அடிகளால் உலகமனைத்தையும் விரும்பி அளந்தான்; மெய்யறிவினையுடைய திருவள்ளுவரும் தம்மினின்றுந் தோன்றி அந்நிலை நிற்கின்ற வெண்பாக்குறளின் இரண்டு சிறிய அடிகளால் அவ்வுலக மனைத்திலு முள்ளோரால் நினைக்கப்பட்டவற்றையெல்லாம் ஆராய்ந்து அளந்தார்.* (௬)

### நக்கீரர்

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானு அறமுதலா அந்நான்கும்—ஏனோருக்
கூழி னுரைத்தாற்கும் ஒண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

(போ - ரை.) *தானே அனைத்தையும் அறிந்து, தண்ணிய தமிழின்கண் குறள்வெண்பாக்களால் விட்டு நீங்குதல் கூடாத அற முதலாகிய அந்நான்கு பொருள்களையும் அவற்றை யறியாதவர்களுக்கு அவர் எளிதினறிய முறையாற் சொல்லியருளிய திருவள்ளுவருக்கும் ஒள்ளிய நீரைத் தந்த மேகத்துக்கும், இவ்வுலகம் எதிர்நன்றி யாது செய்யும்? (ஒன்றும் இல்லை) அவரும் அதுவும் வாழ்க.* (௭)

### மாமூலனார்

அறம்பொரு ளின்பம்வீ டென்னும்அந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை அவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.

(போ - ரை.) *அற முதலாகச் சொல்லப்பட்ட நான்கனது கூறுபாட்டையும் தெரிந்து உலகத்தார்க்குச் சொல்லிய தேவனை மறந்தாயினும் ஒரு மனிதனாக உட்கொண்டு வள்ளுவனென்று சொல்லுதற்கு ஒருவனுளனாயின், அவன் அறிவில்லாதவனாவன்; அவனது வாயிற்பிறந்த அச்சொல்லை அறிவுடையார் கொள்ளார்.* (௮)

### கல்லாடர்

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி.

(பொ - ரை.) *அறுவகை மதத்தோரும் ஒரு மதத்தார் தமது நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள்கள் ஒன்றேயென்று நாட்டுவராயின், மற்றொரு மதத்தார் தம் நூலிலே அதனை மறுத்து அவை வேறு மென்று நாட்டுவர்; அப்படி வேறென்று நாட்டின், பின்னொரு மதத்தார் அதனை அன்றென்று மறுப்பர்; (ஆதலால், மதநூல்களெல்லாம் இவ்வாறு முரண்படுகின்றன;) திருவள்ளுவராலே முப்பாலாகச் சொல்லப்பட்ட குறளை நன்றென்று கொள்ளுதற்கு எவ்வகைப்பட்ட பகுதியோரும் உடன்படுவர்.* (கூ)

### சீத்தலைச்சாத்தனார்

மும்மலையும் முந்நாடும் முந்நதியும் முப்பதியும்
மும்முரசும் முத்தமிழும் முக்கொடியும்—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.

(பொ - ரை.) *பாக்களின் முறைமைதெரித்திட்டனாகிய திருவள்ளுவர்தம் திருக்குறளானது, கொல்லிமலை நேரிமலை பொதியமலை எனப்படுகின்ற மூன்று மலைகளையும், குடநாடு புனனாடு தென்னாடு எனப்படுகின்ற மூன்று நாடுகளையும், பொருநை காவிரி வைகை எனப்படுகின்ற மூன்று ஆறுகளையும், கருவூர் உறையூர் மதுரை எனப்படுகின்ற மூன்று ஊர்களையும், மங்கலமுரசு வெற்றிமுரசு கொடைமுரசு எனப்படுகின்ற மூன்று முரசுகளையும், இயல் இசை நாடகம் எனப்படுகின்ற மூன்று தமிழ்களையும், விற்கொடி புலிக்கொடி மீனக்கொடி எனப்படுகின்ற மூன்று கொடிகளையும், கனவட்டம் பாடலம் கோரம் எனப்படுகின்ற மூன்று குதிரைகளையும், தாம் முறையேயுடைய சேர சோழ பாண்டியர் எனப்படுகின்ற மூவரசருடைய பெரிய முடிகளின்மேலுங் கொள்ளப்பட்ட மாலையன்றோ?* (க0)

### மருத்துவன்றாமோதரனார்

சீந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்த மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.

(பொ - ரை.) தன் பகையென வெகுண்டு மலையைக் குத்து கின்ற பெரிய களிறுபோலுள்ள அரசனே, செந்தினீர்ச் சருக்கரையை யும் சிதைக்கப்பட்ட லிங்கையும் தேனொடு கலந்து மோந்தபின் அதனால் தலைக்குத்துடையோர் யாவர்க்கும் தலைக்குத்து இல்லையாகும்; திருவள்ளுவர் அருளிய திருக்குறளினாலே சீத்தலைச்சாத்தனார்க்குத் தலைக்குத்து இல்லையாயிற்று. (கக)

நாகன்றேவனார்

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளா தாம்
அப்பா லொருபாலை ஆய்பவோ வள்ளுவனார்
முப்பான் மொழிமூழ்கு வார்.

(பொ - ரை.) காளத்தோடு பொருந்திய தாமரைமலர்களை யுடைய ஒரு குளத்து நீரின்கண்ணே மூழ்குவோர் வேறு தண்ணீரை விரும்பாதொழிதல் வியப்பைச் செய்வதன்று; திருவள்ளுவரது முப் பால்களையுடைய நூலின்கண்ணே தோய்பவர் தாம் வீணாக, அப்பால் ஒரு நூலை விரும்புவரோ? (விரும்பார்;) ஆதலின் இதுவே, வியப்பைச் செய்வது. (கஉ)

அரிசில்கிழார்

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தோறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள் விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.

(பொ - ரை.) வேதத்திலே பலவகையாகப் பரவிக்கிடக்கும் எல்லாப்பொருள்களையும் இப்பூமியிலுள்ளோர் அறிதற்பொருட்டு வேறாகப் பிரித்து, அது அது தனது தனது வகையோடு சேரும்படி சுருங்கிய சொல்லால் பொருள்விளங்க விரிவாகச் சொல்லுதல் வல்லார் வள்ளுவரல்லது ஒருவரு மில்லை. (கங)

பொன்முடியார்

கானின்ற தொங்கலாய்! காசிபனார் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப—நூன்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாநின் றளந்த குறள்.

(போ - ரை.) மணந்தங்கப்பெற்ற மாலையையுடைய பாண்டிய மன்னனே! முன் காசிபராலே தரப்பட்ட குறளே, மண்ணின் கண்ணே நின்று உலகத்தை அளந்த குறளென்று சொல்லுவர். தாம் இங்கே எழுந்தருளித் திருவள்ளுவராலே தரப்பட்ட குறள், நூலின் முறையோடு கூடி விண்ணின்கண்ணே நின்றும் மண்ணின்கண்ணே நின்றும் உலகத்தை அளந்தது. (கச)

### கோதமனர்

ஆற்றல ழியுமேன் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதா—ரேட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனர் முப்பாலைச்
சோல்லிடினும் ஆற்றல்சோர் வின்று.

(போ - ரை.) மறையோர்கள் நான்கு வேதங்களையும் வாய்ப்பாடமாகக் காப்பாற்றி ஏட்டின்கண் எழுதிவைத்தால் வலியில்லாரும் ஓதுவராகலின் அவற்றின் வலிமை குறையுமென்று ஏட்டின்கண் எழுதார்; திருவள்ளுவரது திருக்குறளை ஏட்டின்கணெழுதிவைத்து வலியுடையவரும் வலியில்லாரும் ஓதினும் வலிமை குறைதலில்லை.

### நத்தத்தனர்

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னேடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்கி வீற்றிருக்க லாம்.

(போ - ரை.) பாயிர நான்கதிகாரங்களோடு சேர்ந்து தொகையாகிய அரிய ஆயிரத்து முந்நூற்றுமுப்பது குறள் வெண்பாக்களையும் ஓதியுணர்ந்த பின்பு, போய் ஒருவரது வாயாலே கேட்டறிதற்கு நூலுளவோ? (இல்லை;) நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியோராகிப் பிறர் தம்மிடத்து வந்துகேட்க வீற்றிருக்கலாம். (கரு)

### முகையலூர்ச் சிறுகருந்தும்பியார்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தேள்ளுத லன்றே சேயற்பால—வள்ளுவனர்
முப்பாலின் மிக்க மோழியுண் டேனப்பகர்வார்
எப்பா வலரினு மில்.

(போ. - ரை.) திருவள்ளுவரது திருக்குறளின் மேற்பட்ட நூலொன்று உளதென்று சொல்லவல்லவர் எவ்வகைப்பட்ட புலவருள்ளும் இல்லை: (ஆதலால்) நாம் இந்நூலைக் குறித்துச் செயக்கடவன, நாம் இதன் பொருளைச் சிந்தித்துக்கொள்ளுதலும், சிந்தித்துப் பிறருக்கு அதனைச் சொல்லுதலும், பிறராலே சொல்லப்பட்ட அதனைத் தெளிதலும் அல்லவா? (கஎ)

### ஆசிரியர் நல்லந்துவனார்

சாற்றிய பல்கலையுந் தப்பா அருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பார்
எப்பா வலரினு மில்.

(போ - ரை.) அறிவுடையோராற் சொல்லப்பட்ட பல நூல்களாலும் தப்பாத அரிய வேதத்தினாலும் காப்பாற்றிவைத்திருந்து உலகத்தார்க்குச் சொல்லப்பட்ட பொருள்களெல்லாம் தன்னிடத்தே காட்டும்படி திருக்குறளைச் சொல்லிய திருவள்ளுவரை யொப்பார் எவ்வகைப்பட்ட பாவலருள்ளும் இல்லை. (கஅ)

### கீரந்தையார்

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினன்
முப்பாலி னாற்பான் மொழிந்தவ—ரெப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.

(போ - ரை.) எவ்விடத்திலும் கூர்மை வைத்த சிறப்புப்பொருந்திய வேலையுடைய பாண்டியன் மனமகிழ, சொல்லப்பட்ட பொருள் வழுவாமல் முதன்மையுடைய பாவாகிய குறள்வெண்பாக்களாலே தாம் மாட்சிபெற்ற பாடற்றொழிலினாலே மூன்று பால்களிலே அற முதலிய நான்கு பகுதிப்பொருளையும் அருளியவர் கடவுட்டன்மையையுடைய திருவள்ளுவநாயனார். (கக)

### சிறுமேதாவியார்

வீடொன்று பாயிர நான்கு விளங்கற
நாடியமுப் பத்து மூன்றொன்றாழ்—கூடுபொருள்
எள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன்ன வகை.

(போ - ரை.) திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகாரவகை, பாயிரம் நான்கதிகாரத்தையுடைத்து; அறம் முப்பத்துமூன் றதிகாரத்தையுடைத்து; ஊழ் ஓரதிகாரத்தை யுடைத்து; பொருள் எழுபததிகாரத்தையுடைத்து; காமம் இருபத் தைந்ததிகாரத்தை யுடைத்து. (௨௰)

நல்கூர்வேள்வியார்

உப்பக்க நோக்கி உபகேசி தோள்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

(போ - ரை.) வடமதுரைக்கு அப்பக்கத்தைக் குறித்துச் சென்றேணுகிய உமாதேவியினது தோளைமணந்த கடவுளை ஆதாரமென்று சொல்லுவர்; நீர்வளத்தையுடைய தென்மதுரைக்கு இப்பக்கம் மாதாநுபங்கி யெனப்படுகின்ற குற்றமற்ற புலமையாகிய தேனைச் சொரிகின்ற செவ்விய நாவாகிய மலரையுடையவரை (வள்ளுவரை) ஆதாரமாகக் கூறுவர்.

ஊபகேசி நப்பின்னை யென்றும், அவள் தோள் மணந்தான் கண்ணபிரான் என்றும், உத்தரமாமதுரை அவன் அவதரித்த வடமதுரையென்றும், மாதாநுபங்கி செருக்கொழிதலுடையான் என்றும் பொருள் கூறுவர். (௨௧)

தொடித்தலைவிழுத்தண்டினர்

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய
நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள்.

(போ - ரை.) பாயிரம், இல்லறம், துறவறம், ஊழெனு அறப்பாலி னுட்பிரிவுகள் நான்கும்; அரசு, அமைச்சு, அரண், கூழ், படை நட்பு, ஒழி பென அறியப்பட்ட பொருட்பாலி னுட்பிரிவுகள் ஏழும்; ஆண்பாற்கூற்று, பெண்பாற்கூற்று, அவ்விருபாற்கூற்றெனக் காமத்துப் பாலி னுட்பிரிவுகள் மூன்றுமாகப் பகுதிசெய்து பெறுதற்கரிய அறம் பொருள் இன்பம் வீடு எனப்படுகிற நான்கு பொருளையும் சொல்லிய பெருநாவலரே அவற்றுளடங்காது ஒழிந்த பொருள் உளதாயின், அதனை நன்றாக அறியவல்லவர் போலும்! (௨௨)

### வெள்ளிவீதியார்

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரிய ரந்தணரே ஆராயி னேனை
இதற்குரிய ரல்லாதா ரில்.

(பொ - ரை.) *ஒருவராலே செய்யப்படாத மொழியாகிய வேதத்துக்கும், திருவள்ளுவரால் அருளப்பட்ட தன் வழியினொழுகுவோர்க்குப் பயன்விளைவிலே பொய்படாத மொழியாகிய திருக்குறளுக்கும் பொருளொன்றே; ஆராயுங்கால் செய்யப்படாத அவ்வேதமோதுதற்குரியவர் அந்தணரே; பொய்படாத இத்திருக்குறளோதுதற்கு உரியவரல்லாதார் உலகத்தி லில்லை.* (உ௩)

### மாங்குடிமருதனார்

ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(பொ - ரை.) *திருவள்ளுவரது வாயினின்றுந் தோன்றிய திருக்குறளின் மாட்சியைச் சொல்லின்; அஃது ஓதப்படுதற்கு எளிய சொற்களை யுடையதாகியும், அறியப்படுதற்கு அரிய பொருள்களை யுடையதாகியும் வேதமெனப்படுகின்ற பொருளாகியும், அவ்வேதத்தின் மிக விளங்கி, குற்றமற்றோர்கள் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் அவர்களுடைய மனத்தைக் கரைக்கும்.* (உ௪)

### எறிச்சலூர் மலாடனார்

பாயிர நான்கில் லறமிருபான் மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பா னால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(பொ - ரை.) *திருவள்ளுவ நாயனார் அவ்வேதத்தின் கருத்துக்களை யாராய்ந்து, தம்மாலே செய்யப்பட்ட நூலினது திறத்திற்குத் தக்க நன்மையுடைமையால் இவையே உரியவை யென்று தெரிந்து, அறத்துப்பாலைப் பாயிரம் நான்கதிகாரமும், இல்லற*

வியல் இருபததிகாரமும், துறவறவியல் ப்தின்மூன் றதிகாரமும், ஊழ் ஓரதிகாரமுமாக நால்வகையுடைத்தாகக் கூறினர். (உகு)

போக்கியார்

அரசிய லையைந்து அமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டோன் றேண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை.

(போ - ரை.) எண்ணப்பட்ட பொருட்பால் அரசியல் இருபத்தைந்ததிகாரமும், அமைச்சியல் பத்ததிகாரமும், அரணியல் இரண்டதிகாரமும், பொருளியல் ஓரதிகாரமும், படையியல் இரண்டதிகாரமும், நட்பியல் பதினேழதிகாரமும், ஒழிபியல் பதின்மூன்றதிகாரமுமாகிய இவ்வியல்களேழுடைத்து. (உசு)

மோசி கீரனர்

ஆண்பாலே ழாறி ரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராருக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்ருகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனர் நன்கு.

(போ - ரை.) பெயர்பெற்ற திருவள்ளுவர் ஆண்பாற்கூற்று ஏழதிகாரமும், பெண்பாற்கூற்றுப் பன்னிரண்டதிகாரமும், ஒருவரையொருவர் அடுத்து அன்பைப் பூணுதற்பகுதியுடைய அவ்விருபாற்கூற்று ஆறதிகாரமுமாக, மாட்சியான காமத்துப்பாலினியல்கள் மூன்ருக நன்குங்கூறினர். (உஎ)

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனர்

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனுகி
அந்தா மரைமே லயன்.

(போ - ரை.) அழகிய தாமரைமலர்மேல் வீற்றிருக்கும் நான்முகக் கடவுள்தான் திருவள்ளுவனகி, அதிகாரம் நூற்றுமுப்பத்துமூன்ருக, வடமொழியிலிருந்த மெய்யாகிய வேதப்பொருள் பொய்யுருது விளங்கும்பொருட்டு, உலகத்தார்க்குத் தமிழிற் செய்துதந்தான். (உஅ)

### மதுரைத் தமிழ்நாகனார்

எல்லாப் பொருளும் இதன்பா லுளஇதன்பால்
இல்லாத எப்பொருளு மில்லையாற்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை.

(பொ - ரை.) பலவகை நூல்களாலுஞ் சொல்லப்பட்ட எல்லாப் பொருளும் இந்நூலகத் தடங்கியிருக்கின்றன; இதனிடத் தில்லாத யாதொரு பொருளும் எந்நூலகத்தும் இல்லை; (ஆதலால்) சொல்லளவினாலே விரிந்த நூல்களாற் பயன் யாது? திருவள்ளுவ ராலே தரப்பட்ட இந்நூலொன்றே மண்ணுலகத்தாருக்குத் துணை யாதலமையும். (உக)

### பாரதம் பாடிய பெருந்தேவனார்

எப்பொருளும் யாரும் இயல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

(பொ - ரை.) பாரதம் சீராமகதையையும், மனுமிருதி பழைய வேதத்தையும் ஒப்பனவாகும்; எவ்வகைப்பட்ட பொருள்களையும் எவ்வகையோரும் அவற்றின்றன்மையோடு அறிய அவர்க்குச் சொல் லும்படிக்குத் திருவள்ளுவர் சொல்லால் வந்த திருக்குறளுக்கு உவ மானமாகத்தக்கது வேறொன்றில்லை. (ருo)

### உருத்திரசன்மகண்ணர்

மணற்கிளைக்க நீரூறும் மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோர்க்
காய்தொறும் ஊறும் அறிவு.

(பொ - ரை.) மணலைத் தோண்டுந்தோறும் நீர் பெருகும்; புதல்வர்கள் வாய்வைத்து உண்ணுந்தோறும் தாயினது முலைக்கண் நல்ல பால் பெருகும்; அவைபோல, பிணங்குதற்கு ஏதுவில்லாத வாய்மைச் சொல்லையுடைய திருவள்ளுவரது திருக்குறளை ஆராயுந் தோறும் அறிவுடைய புலவர்க்கு அறிவு வளரும். (ருக)

### பெருஞ்சித்திரனர்

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினல்
ஓதிய ஒண்பொரு ளெல்லாம்—உரைத்ததனற்
ருதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

(போ - ரை.) பொடியோடு விரிந்த பூமாலையையுடைய பாண்டியனே! குற்றமில்லாத திருவள்ளுவர் இனிய குறள் வெண்பாக்களே நான்கு வேதங்களாலுஞ் சொல்லப்பட்ட ஒள்ளிய பொருள்களையெல்லாங் கூறினமையால், மேம்பாட்டுக்குத் தக்கவை அக்குறள் வெண்பாக்களோ ? முதனூலாய் நின்று அவற்றைப் பயந்த வேதங்களோ ? நீ சொல்வாயாக. (ருஉ)

### நரிவெரூஉத்தலையார்

இன்பம் பொருளறம் வீடென்னும் இந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூன்—மன்பதைகட்
குள்ள அரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(போ - ரை.) திருவள்ளுவர், இன்ப முதலிய இந் நாற்பொருளியல்புகளையும் மக்கட்பரப்புக்கு அக்காலத்தில் அறியும்வண்ணஞ் சொல்லப்பட்ட பழமொழி வேதமானது ஓதியுணரப்படுதற் கரிதென்று, அவற்றை உலகத்தார் எளிதினுணரும்படி திருக்குறளைக் கூறினர். (ருஙு)

### மதுரைத்தமிழாசிரியர் செங்குன்றூர்கிழார்

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருண்மா லைக்கும் பெயர்.

(போ - ரை.) உலகின்கண்ணே புலவரெனத் திருவள்ளுவரையன்றி வேறு சிலரையும் புலவரென்று சொல்லுதல், மாலையென்பது நிலவால் விளங்குகின்ற அந்திக்கும் பெயராக, மற்றும் சூழ்கின்ற விருளையுடைய அந்திக்கும் பெயராகச் சொல்லுதல் போலும். (ருச)

### மதுரையறுவைவாணிகன் இளவேட்டனார்

இன்பமுந் துன்பமு மென்னும் இவையிரண்டும்
மன்பதைக் கெல்லாம் மனமகிழ—அன்பொழியா
துள்ளி யுணர உரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து.

(போ - ரை.) *புகழப்படுஞ் சீரையுடைய திருவள்ளுவர், பின் வரக்கடவனவாய சுகமுந் துக்கமு மென்னப்பட்ட இவற்றினுடைய இருவகைக் காரணங்களையும் ஆராய்ந்தறியவும், தம்மேலன்பு நீங்காமல் உள்ளங் களிகூருவும் திருக்குறளை மக்கட் பரப்புக்கெல்லாம் வாயுறை வாழ்த்தாகக் கூறினார்.* (நரு)

### கவிசாகரப் பெருந்தேவனார்

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்
ஆவிற் கருமுனியா யானைக்—கமரரும்பல்
தேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

(போ - ரை.) *மலர்களுக்குள்ளே தாமரை மலரும், பொன்களுக்குள்ளே சாம்புனதப் பொன்னும், பசுக்களுக்குள்ளே காமதேனுவும், யானைகளுக்குள்ளே ஐராவதமும், தேவர்களுக்குள்ளே திருமாலும்போல, நூல்களுக்குள்ளே திருவள்ளுவரது குறள் வெண்பாச் சிறந்தது என்று அறிவுடையோர் சொல்லுவர்.* (நசு)

### மதுரைப் பெருமருதனார்

அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்
திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்
வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்
ஓதவழுக் கற்ற துலகு.

(போ - ரை.) *திருவள்ளுவர் அறத்தின் கூறுபாடு முப்பத்தெட்டதிகாரங்களாலும், பொருட்கூறுபாடு எழுபததிகாரங்களாலும், காமத்தின் கூறுபாடு இருபத்தைந்ததிகாரங்களாலும் தெளியும்பொருட்டு, காரணகாரிய வொழுங்கால் வேதத்தினுயர் வாகிய பொருளைக் குறள் வெண்பாக்களாலே ஓதலால், உலகமானது வழுவுதலினின்றும் நீங்கிற்று.* (நஎ)

### கோவூர்கிழார்

அறமுதல் நான்கும் அகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.

(பொ - ரை.) *அறமுதலிய நான்கு பொருள்களையும் அகன்ற உலகத்துள்ளோரெல்லாம் வகைப்பட ஆராய்ந்து தெளியும் பொருட்டுக் குறள்வெண்பாக்களாலே சொல்லப்பட்ட திருவள்ளுவ நாயனாரது முப்பால்களையுடைய புத்தகத்தின்கண்ணே முற்காலத்துள்ள பெரியோரது நூல்களுக்கு நேர்தல் பொருந்தாது.* (ருஅ)

### உறையூர் முதுகூற்றனார்

தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு.

(பொ -ரை.) *தெய்வத்தன்மையாற் சிறந்த திருவள்ளுவரது குறள்வெண்பாக்களோடு கூடிச் சிறந்து தோன்றுகின்ற முப்பால்களையும் ஓதாரது வாக்கிற்கு இன்சொற்சொல்லி வாழ்தல் உண்டாகாது; மனத்திற்குச் சொற்களின் சுவையை அறிதல் உண்டாகாது; இவையன்றியும் காயத்துக்கு நல்ல செயலுண்டாகாது என்று நினைத்துத் திருமகள் அவரிடத்துச் சேராள்.* (ருக)

### இழிகட் பெருங்கண்ணனார்

இம்மை மறுமை யிரண்டும் எழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி னுன்கின் விதிவழங்க வள்ளுவனார்
பாடின ரின்குறள்வெண் பா.

(பொ - ரை.) *இகபரங்கட்காவன இரண்டையும் வினைப்பயன் றொடர்தற்குரிய எழு பிறப்பிற்குமாகச் செவ்வையான வழியால் யாவரும் தெளிதல் பெறவும், அறம் பொருள் இன்பமென்னும் முப்பால்களுள் அம்முப்பாற் பொருள்களோடு வீடுமாகிய நாற்பொருள்களின் விதிகளும் வழங்கவும், திருவள்ளுவநாயனார் இனிய குறள்வெண்பாவைப் பாடினர்.* (சo)

செயிர்க்காவிரியார்மகனார் சாத்தனார்

ஆவனவும் ஆகா தனவும் அறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார்.

(பொ-ரை.) மக்களுக்கு ஆவனவற்றையும் ஆகாதவற்றையும் அறிவுடையார் யாவரும் இதிலிருந்து எடுத்துச்சொல்லுதற்கு வல்லவராவார்; ஆதலால், தேவராகிய திருவள்ளுவராலே சொல்லப்பட்டவற்றையே ஒப்பில்லாத ஒழுக்கத்தை மேற்கொண்டவர் செய்வார். (ருக)

செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார்

வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழா லுரைசெய்தார்—ஆதலால்
உள்ளுந ருள்ளும் பொருளெல்லாம் உண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு.

(பொ-ரை.) வேதத்தின் பொருளை உலகத்தார் ஓதியுணரும் பொருட்டு உபாயத்தால் விரித்துத் தமிழ்மொழியினாலே சொல்லியருளினார்; ஆதலால், நினைப்பவர் நினைக்கும் பொருள்களெல்லாம் திருவள்ளுவர் திருவாயிற் பிறந்த திருக்குறளின்கண்ணே உண்டென்று அறிவுடையோர் சொல்லுவர். (ருஉ)

வண்ணக்கஞ் சாத்தனார்

ஆரியமுஞ் செந்தமிழும் ஆராய்ந் திதனினிது
சீரியதென் றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனார்
ஓது குறட்பா வுடைத்து.

(பொ-ரை.) வடமொழி வேதமுடைத்து; தமிழ்மொழி திருவள்ளுவநாயனார் சொல்லிய குறட்பா வுடைத்து; ஆதலால், வடமொழியையுந் தென்மொழியையும் ஆராய்ந்து இதைக்காட்டிலும் இது சிறப்புடைத்தென்று ஒன்றைத் தெரிந்து சொல்லுதல் கூடாது.

### களத்தூர்கிழார்

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதல்நான்குஞ் சாலும்—அருமறைகள்
ஐந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார்
புந்தி மொழிந்த பொருள்.

(பொ - ரை.) *இருக்குமுதற் பாரத மீறாகிய அரிய வேதங்களைந்தும் அவ்வேதத்தின் வழிப்பட்ட சமயநூல்களாறுமே நம்முடைய திருவள்ளுவரால் உலகத்தார்க்குப் புத்தியாகச் சொல்லப்பட்ட நூலிலடங்கும்; ஆதலால், ஒருவர் ஒருவிகற்பமும் இருவிகற்பமுமாகிய இருவகைக் குறள்களையுமே முப்பால்களில் மனனஞ்செய்து அறியப்படுகின்ற அறமுதலிய நாற்பொருள்களும் அவருக்குப் போதும்.*

### நச்சுமனார்

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழக்கியல் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி
என்றெவர் செய்தன எல்லாம் இயம்பின
இன்றிவ ரின்குறள்வெண் பா.

(பொ - ரை.) *எழுத்துமுதல் வண்ணமீறாகச் சொல்லப்பட்ட இவற்றின் வழுவுதலில்லாமல் எக்காலத்தில் எவரால் எவை செய்யப்பட்டன. அவையெல்லாம் இக்காலத்து இத்திருவள்ளுவராலே செய்யப்பட்ட இவ்வினிய குறள்வெண்பாக்களிற் சொல்லப்பட்டன.* (சரு)

### அக்காரக்கனி நச்சுமனார்

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணின்
நிலைநிரம்பு நீர்மைத் தெனினுந்—தொலைவிலா
வானூர் மதியந் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூல் நயத்தின் பயன்.

(பொ - ரை.) *மதியமும் முப்பானூலும் பதினாறு கலைகளாலும், அறுபத்துநாலு கலைகளாலும் நிறைந்து; நோக்குதற்கு, ஆராய்ச்சி செய்வதற்கு இனிதாகி; முகக்கண்ணினிலையில், அகக் கண்ணினிலையில், நிரம்புகின்ற தன்மையுடைத்தாயினும், குண முடைத்தாயினும், திருவள்ளுவரது முப்பானூலினது நயத்தால் விளைவதாகிய இனிய. பயனனது ஒழிவின்றி ஆகாசத்தின்கண்ணே திரிகின்ற மதியினிடத்து உண்டோ?* (சசு)

### நப்பாலத்தனார்

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனு ரேற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிருள் நீக்கும் விளக்கு.

(பொ - ரை.) *தருமம் அகலாகவும், பொருள் திரியாகவும், காமம் நெய்யாகவும், செவ்விய சொல் நெருப்பாகவும், குறட்பாத் தண்டாகவும், திருவள்ளுவ நாயனார் பூமியின்கண் வாழ்வோரது அகத்திருளை ஒழிப்பதாகிய விளக்கு ஏற்றினார்.* (சஎ)

### குலபதி நாயனார்

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிருள் தள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரும் ஒக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு.

(பொ - ரை.) *நெஞ்சமாகிய தாமரைமலரை விரித்து, மக்களது அகத்திலுள்ள, பிறிதொன்றனாலே நீக்கப்படாத, அஞ்ஞான விருளை நீக்குதலால், திருவள்ளுவரது குறள்வெண்பாவும், புறத்துத் தாமரைமலரை விரித்துப் புறத்திருளை நீக்குகின்ற சூரியனும், அச் செய்கையைக் கொண்டு ஒக்குமென்று கொள்ளத்தகும்.* (சஅ)

### தேனீக்குடிக் கீரனார்

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலில்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

(பொ - ரை.) *கடவுட் டன்மையையுடைய திருவள்ளுவ நாயனார் மூன்று பால்களையுடையதாகக் கூறிய குறணூலைக் கேட்டறிதலால் உலகின்கண் வாழ்வாருடைய மனத்துப் பொய்யின் பகுதியிற் பட்டவையெல்லாம் பொய்யேயாய்ப் போயின; பொய்ம்மை யல்லாத மெய்யின் பகுதியிற் பட்டவை யெல்லாம் மெய்யேயாய் விளங்கின.* (சக)

### கொடிஞாழன் மாணிபூதனார்

அறனறிந்தேம் ஆன்ற பொருளறிந்தேம் இன்பின்
திறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு.

(போ - ரை.) பகைவரை யெறிந்த வாட்படை தங்கிய வீரமுங் கும் பாண்டியனே! திருவள்ளுவநாயனார் வாக்கால் இதற்குமுன் கேட்கப்பட்டில்லாதவை யெல்லாம் இப்போது கேட்டு, அறத்தின் திறத்தை அறிந்தேம்; பொருளின் திறத்தை அறிந்தேம்; இன்பத்தின் திறத்தை அறிந்தேம்; வீட்டின் திறத்தை அறிந்தேம். (ருo)

கவுணியனார்

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினியு
வந்த இருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய இன்குறள்வெண் பா.

(போ - ரை.) முற்பட்டதாகிய நல்ல வழியை நாமறியும் பொருட்டு நாவால் விளங்குகின்ற புலமையையுடைய திருவள்ளுவ நாயனாராற் சொல்லப்பட்ட இனிய குறள் வெண்பாக்கள் நினைத்தால் மனத்திற்கு இன்பஞ் செய்வன; கேட்டாற் காதுக்கு இன்பஞ்செய் வன; ஓதினால் வாய்க்கு இன்பஞ் செய்வன, தொடர்ந்து வருகின்ற இருவினைகளாகிய நோய்களுக்குப் பெரிய மருந்துகளாவன. (ருக)

மதுரைப் பாலாசிரியனார்

வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்
பொள்ளென நீக்கும் புறஇருளைத்—தெள்ளிய
வள்ளுவ ரின்குறள் வெண்பா அகிலத்தோர்
உள்ளிருள் நீக்கும் ஒளி.

(போ - ரை.) சுக்கிரன் தேவகுரு சூரியன் சந்திரன் என்பன புறத்திருளை விரைவிலே நீக்கும் ஒளிகளாம்; (அவைபோல) முற் றுணர்ந்த திருவள்ளுவநாயனாரது இனிய குறள்வெண்பா உலகத் தோரது உள்ளிருளை நீக்கும் ஒளியாம். (ருஉ)

ஆலங்குடிவங்கனார்

வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்
தெள்ளமுதின் தீஞ்சுவையும் ஒவ்வாதால்—தெள்ளமுதம்
உண்டறிவார் தேவர் உலகடைய உண்ணுமால்
வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து.

(பொ - ரை.) திருவள்ளுவரது பாட்டினது தீஞ்சுவையைச் சொல்லுமிடத்து, உண்ணப்படுகின்ற தெள்ளிய அமுதினது தித்திப் பாகிய சுவையும் ஒப்பாகாது; அத்தெள்ளிய அமுதை யுண்டு அதன் சுவையை அறிபவர் தேவர்கள்; வளம் பொருந்திய தமிழின்கண்ண தாகிய முப்பாலாகிய அதின் மும்மடி சிறந்த பாலை எவ்வுலகத்தாரும் மகிழ்ந்து உண்டு தீஞ்சுவை யறிவார். (௫௪)

இடைக்காடர்

கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

(பொ - ரை.) நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்வெண்பாக்களும், கடுகை அதனடுவே துளைசெய்து, எழு கடனீரையும் அத்துளையுட் பெய்து, தன்னளவிற் குறுகும்வண்ணம் தறித்துவைத்தால், அதுபோல்வனவாகும்.

ஔவையார்

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

(பொ - ரை.) நாயனாரது நூலின் ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களும், கடுகினும் மிக நுண்ணியதாகிய அணுவை அதனடுவே துளைசெய்து, எழு கடனீரையும் அத்துளை யுட் பெய்து, தன்னளவிற் குறுகும்வண்ணம் தறித்துவைத்தால், அது போல்வனவாகும்.

---

ஆசிரியர் திருப்பெயர்கள்-௯

திருவள்ளுவர்.
நாயனார்.
தேவர்.
முதற்பாவலர்.
தெய்வப்புலவர்.
நான்முகனார்.
மாதாநுபங்கி.
செந்நாப்போதார்.
பெருநாவலர்.

நூலின் திருப்பெயர்கள்-௯

திருக்குறள்.
முப்பானூல்.
உத்தரவேதம்,
தெய்வநூல்.
திருவள்ளுவர்.
பொய்யாமொழி.
வாயுறைவாழ்த்து.
தமிழ்மறை.
பொதுமறை.

---

# திருக்குறட் பாயிரக் கருத்து

[திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளையவர்கள், பி. ஏ. எழுதியது]

திருக்குறள் இற்றைக்குச் சுமார் 1900 ஆண்டுகளுக்கு முன்னே தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரால் உலகின்கண்ணுள்ள மக்களெல்லாம் உய்யும்பொருட்டு இயற்றப்பட்ட ஓர் அரிய பெரிய தமிழ்நூல். அஃது இரண்டு அடியாலாகிய குறள்வெண்பாவா லாக்கப்பட்டதால் திருக்குறள் என்னும் பெயர் பூண்டது.

"ஆயிர முகத்தான் அகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

என்ற தமிழ் ஆன்றோர் முறைப்படி திருவள்ளுவ நாயனார் இந் நூலுக்குப் பாயிரமாக, க. கடவுள் வாழ்த்து, உ. வான் சிறப்பு, ங. நீத்தார் பெருமை, ச. அறன்வலியுறுத்தல் என்கிற முதல் நான்கு அதிகாரங்களையுஞ் செய்தருளினர். இந்நான்கு அதிகாரங் களும் பாயிரம் என்பதை அவர் தாம் முதலாவது சொல்லப் புகுந்த அறத்துப்பாலின் முதற்பகுதியாகிய இல்லறவியலுக்கு முன்னே அவற்றை வைத்த வைப்பு முறையே இனிது விளக் கும். அன்றியும், சிறப்புப்பாயிரம் சொன்ன சங்கப்புலவர்களில் சிறுமேதாவியார் "வீடொன்று பாயிரம் நான்கு" எனவும் எறிச்ச லூர் மலாடனுர் "பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே" எனவும், நத்தத்தனுர் "ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும் பாயிரத்திேனேடு" எனவுந் தாங்கள் பாடிய வெண்பாக்களில் விளங்க வுரைத்தருளினர்கள்.

நாயனர் முதல் நான்கு அதிகாரங்களையும் பாயிரமாக யாது கருத்துப்பற்றிச் சொல்லியருளினர் என்பதே ஈண்டு எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியாகும்.

பாயிரத்தைப் பற்றித் தொல்காப்பியம் நச்சினர்க்கினியர் உரை யிற் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது :—

'பருப்பொருட் டாகிய பாயிரங் கேட்டார்க்கு
நுண்பொருட் டாகிய நூலினிது விளங்கும்'—என்முராகலின்

"அப்பாயிரந்தான் தலையமைந்தயானைக்கு வினையமைந்த பாகன் போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும்போலவும், நூற்குஇன்றியமையாச் சிறப்பிற்முயிருத்தலின், அது கேளாக்காற், குன்று முட்டிய குரீஇப் போலவுங் குறிச்சிபுக்க

மான்போலவும் மாணுக்கன் இடர்ப்படும் என்க." ஆகலான், எந்நூல் உரைப்பினும் பாயிரம் உரைத்து நூல் உரைப்பதே மரபு என்று பண்டைத் தமிழ்நூற் புலவர் நிறீஇயினர்.

மேலே சொல்லிய முறைமைப்படி திருக்குறள் நூலின் நுண் பொருளவாகக் கூறப்பட்டன பருப்பொருளவாக முதல் நான்கு அதி காரங்களிலும் எவ்வாறு கூறப்பட்டுள்ளன என்பது கருதுவாம்.

நூலிற் கூறப்படும் பொருள்கள், மக்களால் அடைதற்பாலன வாகிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களாம். திருவள்ளுவ நாயனுர் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பொருள்களையும் நூலில் அறத்துப்பால், பொருட் பால், காமத்துப்பால் என மூன்று பால்களாகப் பகுத்து, அவற்றின் இலக்கணங்களை யெல்லாம் விரிவாகவும் வீட்டைப்பற்றிப் பாயிரத் தில் கடவுள் வாழ்த்து என்ற அதிகாரத்திலும், அறத்துப்பால் துறவறவியலில் நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்தல் என்ற நான்கு அதிகாரங்களிலும் காரணவகையாற் சுருக்கமுங் கூறி யருளினர். ஆகவே, சிறப்புப் பாயிரமாகிய திருவள்ளுவமாலையில் "முப்பாலி ஞற்பான் மொழிந்தவர்" என்று கீரந்தையார் கூறியவண் ணம் நாயனுர் முப்பாலினும் நான்கு பாலையும் மொழிந்தாராவர்.

மக்கள் நான்கு உறுதிப் பொருள்களையும் அடைவது உலக வாழ்விஞலேயே. இந்த உலக வாழ்வு உண்டாம்பொருட்டும், செவ்விதின் நடைபெறும்பொருட்டும், முதற்கண் வேண்டப்படுவது கடவுள். "தானலா துலகமில்லை" என்று திருநாவுக்கரசு நாயனர் கூறியருளியபடி கடவுளின்றி உலகம் உளதாகாது; உயிரில் பொருளும் உளதாகாது; உயிர்ப் பொருளும் உளதாகாது. ஆகையி ஞலே, நாயனர் பாயிரத்தில் முதல் அதிகாரமாகக் கடவுள் வாழ்த்துக் கூறினர். கடவுள் வாழ்த்து வாழ்த்து, வணக்கம், பொருளியல் புரைத்தல் என மூவகைப்படும். இம் மூன்றனுள் நாயனர் முதலதி காரத்திற் கூறிய வாழ்த்து பொருளியல்புரைத்தலாகும். நாயனர் கடவுள் வாழ்த்தைப் பொருளியல்புரைத்தல் என்ற வகையிற் கூறி யது, தாம்நூலில் நுவல எடுத்துக்கொண்ட நுண்பொருள்களைப் பருப் பொருள்களாகக் குறித்து விளக்குதற்பொருட் டென்க.

உயிர்களின் உலகவாழ்வு அதனை யியக்கும் ஒரு கடவுளையின்றி நிகழாது என்று சொல்லுவதோடு அமையாது; நாயனர் முதல் எட்டுக் குறள்களிலும் கடவுள் இன்ன இன்ன குணம் உடையவர் என்று வகுத்துக்கூறி, ஒன்பதாவது குறளில் அவ்வெட்டுக் குணங்களையுந் தொகுத்துக்கூறி, இத்தகைய பேரறிவும், பேரன்பும், பேராற்றலும் உடைய கடவுளை மக்கள் மனத்தான் நினைந்து, நாவினல் வாழ்த்தி, உடம்பால் வணங்கி வழிபட்டாலன்றி உலக வாழ்வின் பயனுகிய

பிறவிப் பெருங்கடலை நீந்துதல் முடியாது என்று பத்தாவது குறளில் வற்புறுத்தியருளினர். அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு உறுதிப்பொருள்களுள் உயிர்கள் முடிவில் அடையும் பொருள் வீடு ஒன்றே என்பதையும், அறம் பொருள் இன்பம் என்ற மூன்றும் வீட்டையடைவிக்கக் கருவிகளா யுதவும் இடையிலுள்ள பொருள்களென்பதையும், அறமானது பொருள் இன்பம் போலாது, வீட்டினையும் உதவவல்லது என்பதையும், நாயனர் இவ்வதிகாரத்தில் குறிப்பித்தருளினர். இன்னும் அவர் கடவுளை எல்லாக் குறள்களிலும் ஒருமையிற் சொன்னதனலும், முதலாவது குறளில் கடவுள் தன்வயத்தனதல் என்ற குணத்தைச் சார்ந்த முதன்மை யுடையவன் என்றும், எ-வது குறளில் கடவுள் தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாதவன் என்றும் கூறியதனலும், முழுமுதற் கடவுள் ஒருவனே என்றும், அவன் உயிர்களையெல்லாம் ஆளுந் திறத்தினை யுடையவன் என்றும் உ,ங,ச,ரு,சு,எ,அ,கO, குறள்களில் உயிர்களைப் பன்மையிற் கூறியதனலும் வணங்கு முயிர்களைக் குறிக்குமிடத்து க-வது குறளில் வணங்காத்தலை யென்றும், வணங்கப்படும் கடவுளைக் குறிக்குமிடத்து உ, ங, ச, எ, அ, க, கO குறள்களில் தாள் என்றும், அடியென்றும் கூறியதனல் உயிர்கள் பல என்றும்; அவர்கள் கடவுளால் ஆளப்படுந்தன்மையை யுடைய அடிமைத்திறம் வாய்ந்தவர்களென்றும்; உயிர்களின் தொழிற்பாட்டைக் குறிக்குமிடத்து உ, ச, எ, அ, கO குறள்களில் 'சேர்ந்தார்' 'சேராதார்' என்று கூறியதனல், உயிர்கள் ஒன்றனைச் சார்ந்துநிற்றலும் சார்ந்ததன்வண்ண மாதலுமாகிய இயற்கைக் குணம் உடையவர்களென்றும், அறியாமையினல் உலகத்தைச் சார்ந்து அதன் வண்ணமாய்க் குறைந்த இன்பத்தையும் பெருந்துன்பத்தையும் அடையும் உயிர்கள் பேரின்பப் பயனகிய கடவுளைச் சார்ந்தாலல்லாமல் பிறவிப் பெருங்கடலைக் கடந்து வீடு அடைய முடியாதென்றும் நாம் உய்த்தறியக் கிடக்கின்றன.

இனி, முதலாவது அதிகாரத்திற் கூறியவாறு உலகில் உயிர்ப் பொருளையும் உயிரில் பொருளையும் இயக்கி ஆளவல்லது அக்கினியிற் சூடுபோலக் கடவுளினின்றும் பிரிக்கவொண்ணுத அவனுடைய அருட்சத்தியாகும். இந்த அருட்சத்தி தொழிற்படாது கடவுளிடம் ஒடுங்கியிருக்குங் காலத்து உலகமுந் தொழிற்படாது. அருட்சத்தி வெளிப்பட்டபொழுதுதான் உலகமும் வெளிப்பட்டுத் தொழிற்படும். இந்த அருட்சத்தியின் வெளிப்பாடாகக் கற்ருரும் கல்லாதாரும், அறிவுடையாரும், பேதையரும் உலகில் கண்கூடாகக் காணக் கூடியது மழை. மழையின்றி உலகியல் நடவாது என்பது யாவருக்கும் வெளிப்படை. மழை ஒருகால் உலகிற் பெய்தலும் மற்ருெருகால் பெய்யாதிருத்தலும் எத்தகைய ஆற்றலும் அறிவும் உடைய மக்களின் சத்திக்கும் மேற்பட்ட ஒரு சத்தியின் ருெழிற்பாடு என்று யாவரும் அறியலாம். பருவகாலத்தில் மழை பெய்தாலன்றி

உயிர்கள் பசி நோயால் வருந்துவர் என்னும் வெளிப்படையான செயலானது உயிர்கள் கடவுளின் அருள்வழி உலகில் ஒழுகினு லன்றித் துன்பமடைந்து வருந்துவரென்னும் உண்மையைக் குறிப்பா லுணர்த்துகின்றது. இந்த உண்மையை நாயனர், "துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்—அளியின்மை வாழு முயிர்க்கு" என்று அரசன்மீது வைத்துக் கூறினர்.

மேலே கூறிய காரணங்களினல் நாயனர் பாயிரத்தின் இரண்டாவது அதிகாரமாகக் கடவுள் வாழ்த்துக்குப் பின்னர்க் கடவுளின் அருள்வெளிப்பாடாகிய வான்சிறப்பை வைத்தருளினர். வான் என்று சொல்லாது 'வான் சிறப்பு' என்று அவர் அதிகாரத்துக்குப் பெயரீடு தந்தது, மழை உலகம் நடைபெறுதலுக்கு இன்றியமை யாமையைக் குறித்தற்பொருட்டு. மழையானது மாநிலத்து உயிர் களுக்குக் குடிநீரா யுதவுவதுமன்றி உண்ணுவதற்கேற்ற உணவுப் பொருள்களையும் உண்டுபண்ணுகிறது என்றும், மழை பெய்யாவிடில் உழவர் உழவுதொழிலைச் செய்து உணவுப் பொருள்களை உண்டு பண்ணமாட்டார்களென்றும், இல்லற வாழ்க்கையிலுள்ள மக்கள் ஏனைய மூன்று ஆச்சிரமத்திலுள்ளவர்களுக்கும் உற்ற துணையா யிருந்து தானம் செய்யமாட்டார்களென்றும், துறவிகள் தாங்கள் செயற்பாலதாகிய தவம் செய்யார்களென்றும், தேவாலயங்களில் நடைபெறவேண்டிய பூசனையும் விழவும் நிகழா என்றும், உயிர்கள் பசி நோயினல் வருந்துவரென்றும் நாயனர் பலவாருக மழையைச் சிறப்பித்துக் கூறியருளினர். உழவுதொழில் நடவாது, எனவே, அதன் சார்புபற்றி வரும் வணிகமும் கைத்தொழில் முதலிய ஏனைய தொழில்களும் அரசியலும் நடைபெரு என்பது தானே போதரும். இவ்வாருக மக்கள் உலக வாழ்வில் அடைதற்பாலதாகிய நெறிகொள் சிற்றின்பத்திற்கும் முடிவில் அடைதற்பாலதாகிய வீட்டினை உறு விக்கும் அருளை வளர்த்தற்கும் வேண்டிய பொருளை நன்முயற்சியா லீட்ட உதவுங் கருவி மழைதான் என்று நாயனர் இந்த இரண் டாவது அதிகாரத்தில் சிறப்பித்தருளினர்.

இனிக் கடவுளின் அருள் விளக்கம் உலகின்கண் நிகழ்ந்தாலும், ஆணவமலத்தால் மறைப்புண்டு அறியாமையில் உழலும் மக்கள், கடவுளையும் கடவுளினருளையும்பற்றி அறிந்தாலன்றி உலக வாழ் வின் பயன் அடையார்கள். கடவுளின் அருள் தங்களிடம் பதியப் பெற்ற பெரியோர்களே அவ்வருளை அறிவார்கள். ஆகையால், அத்தகைய பெரியோர்கள் மக்களுக்கு அறிவித்தாலன்றி அவர்கள் அவ்வருளை அறியமாட்டார்கள். ஆதலின், நாயனர் கடவுளின் அருள்விளக்கமாகிய வான்சிறப்பிற்குப்பின் மூன்றும் அதிகாரமாக நீத்தார் பெருமையை வைத்துக் கூறினர். நீத்தாராவர் இருவகைப் பற்றினையும் நீத்த முனிவர்; அவர்கள் தங்களிடத்தில் கடவுளின்

அருள்விளங்கப் பெற்றவர்கள். அவர்களே உரையாசிரியராகிய பரிமேலழகரும், "அறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார்" என்று கூறினர். நீத்தார் என்று சொல்லுத லமையாது நீத்தார் பெருமை என்றது, மக்கள் அவர்கள் பெரு மையை யுணர்ந்தாலன்றி அவர்கள் கூறும் மறைமொழிகளைக் கேட்டு அவற்றின்வழி உலகில் ஒழுகல் இயலாது என்பதைக் குறிக்கின்றது. நாயனர் முதல் இரண்டு குறள்களிலும் நீத்தார் பெருமை எத்தன்மைத் தென்றும்; ௩-வது குறளில் அவர்கள் இம்மை மறுமை வகை யினைச் செவ்விதி லுணர்ந்து உலகின்கண் மக்களுக்கு அறத்தை உணர்த்துதலாகிய தொண்டு பூண்டவர்கள் என்றும; ௪, ரு, குறள் களில் அவர்கள் தங்கள் அறிவின் ஆற்றலால் ஐம்புலனையும் வென்ற வர்கள் என்றும்; சு-வது குறளில் அவர்கள் உலகில் செயற்கரிய செயல் செய்யும் பெரியாரென்றும்; எ-வது குறளில் அவர்கள் தத்துவங்களை அறிந்து அவையிற்றின் தலைநிற்கும் தத்துவஞானிக ளென்றும்; அ-வது குறளில் அவர்கள் மக்கள் அறிந்து உய்யும்படி மறைமொழிகள் சொல்லவல்ல நிறைமொழி மாந்தர் என்றும்; கூ-வது குறளில் அவர்கள் எல்லா நற்குணங்களையு முடையவர்களாதலின், மலைபோன்று யாதொரு துளக்கமுமில்லாத தீரர் என்றும்; க0-வது குறளில் அவர்கள் எல்லா உயிர்களிடத்தும் செந்தண்மை பூண் டொழுகுஞ் செம்மையோர் என்றும் அவர்களுடைய இலக்கணங் களைக் கூறியருளினர்.

அத்தகைய நீத்தாராகிய பெரியார் உலகில் மக்கள் உய்யும் பொருட்டுக் கூறும் மறைமொழி அறமாகும். அறம் என்பது நாயனர் கட்டுரைப்படி மனமொழி மெய்களாற் செயற்பாலன வற்றைச் செய்தலும், விலக்கற்பாலனவற்றைச் செய்யா தொழிதலு மாகும். மக்கள் இவ்வாறு அறத்தின்வழி யொழுகினலன்றி அவர் கள் உலகவாழ்வின் பயனை அடையார்கள். ஆதலின், நாயனர் பாயிரத்தில் நீத்தார் பெருமைக்குப்பின் நான்காவது அதிகாரமாக அறன்வலியுறுத்தல் என்பதை வைத்துக் கூறினர். அறமானது மக்களுக்கு உலகவாழ்விலடையும் பொருள், இன்பம் என்னும் இரண்டு பொருள்களையும் தருவதுடன் முடிவில் அடையும் வீட்டினையுந் தரவல்லது. அறத்தின்வழி ஒருவன் ஒழுகினல் அவனடையத்தக்க பொருளினையும், அதுபற்றி நெறிகொள் சிற் றின்பத்தையும் அடைந்து, பின் நுகர்ச்சி யுணர்வினல் பருவ மடைந்தபொழுது அவ்விரண்டு பொருள்களையும் விடுத்து, வீடு பேறு நாடி முயன்று வீடு அடைதல் திண்ணம். ஆதலின், நாய ஞர் அறன்வலியுறுத்தல் என்று சிறப்பித்துக் கூறினர். அறன் வலியுறுத்தல் என்று பாயிரத்திற் கூறவே, அறம்பற்றிக் காலக் கிரமத்தில் மக்களுக்குத் திண்ணமாய் உண்டாகும் ஏனைய மூன்று பொருள்களும் பருப்பொருள்களாக அடங்குவனவாகும்.

இதுகாறும் கூறியவற்றால், உலக வாழ்வு செவ்விதின் நடைபெற்று மக்கள் நான்கு உறுதிப்பொருள்களையும் அடைவதற்குக் கடவுளும், வான்சிறப்பாகிய கடவுளின் அருள் விளக்கமும், அவ்வருள் தங்களிடம் விளங்குந் தன்மையுடைய பெரியோர்களும், அப்பெரியோர்கள் கூறிய அறமும் இன்றியமையாது வேண்டப்படுதலால் நாயனார், கடவுள் வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்னும் நான்கையும் நான்கு அதிகாரங்களில் பாயிரமாகத் தாம் நூலில் நுவல எடுத்துக்கொண்ட நான்கு உறுதிப்பொருள்களின் பருப்பொருள்களாகக் கூறியருளினார் என்பது ஒருவாறு விளக்கப்பட்டது.

---

# சில குறட்பாக்களுக்கு ஏனை உரையாசிரியர் உரையும் விளக்கமும்

குறள் க. முன்னுரை:—

முதலாவது குறளுக்கு முன்னுரை (அவதாரிகை)யாகப் பரிமேலழகர் கூறியது பின்னர் அவர் கூறிய குறிப்புரைக்கே முரணாகவுள்ளது. அகரத்தை உயிரெழுத்து மெய்யெழுத்துக்களுக்குத் தலைமையாக உவமை கூறியது அகரத்திற்கே தனிச்சிறப்பாயிருத்தல் போல, முழுமுதற் கடவுளாகிய ஒருவனுக்கே ஈண்டுத் தலைமை கூறப்பட்டது. முழுமுதற் கடவுள் (குறள்-எ) சத்துவ முதலிய முக்குணங்களையும் கடந்து மாயாகாரிய உலகிற்கு அப்பாற்பட்ட அருட்குணங்களை யுடையவன் (குறள்-க) ஆதலின், ஈண்டுச் சத்துவ, இராசச, தமோகுணங்களையுடைய மால், நான்முகன், உருத்திரன் ஆகிய மூவரையும் தலைமையுடையவராகக்கொண்டு அம் மூவர்க்கும் வாழ்த்துப் பொதுப்படக் கூறல் ஆசிரியர் கருத்தன் றென்க. உலகிற்கு முழுமுதற்கடவுள் ஒருவனேயன்றி மூவரல்லர்.

குறள் உஎ. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

தத்துவங்களைப்பற்றிச் சாங்கியநூலுள் கூறப்பட்டதின் வேறாக வேறு வேறு சமய நூல்களுள் வரையறுக்கப்பட்டுள்ளன. சைவநூல்களுள் தத்துவங்கள் முப்பத்தாறு 'எனக் காணப்படுகின்றன.

அம்முப்பத்தாறு தத்துவங்களும் ஆசிரியர் வள்ளுவனார் கூறும் ஐந்தின் வகையுள் அடங்கும்.

அறஞ்செய்யுமாற்றைக் கூறுமுகத்தால் அறத்தி னிலக்கணத்தை விளக்கியது:

குறள் ௩௩. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாம் செயல்.

(இ-ள்.) தத்தமக் கியலும் அறவினைக ளெல்லாவற்றையும் இயலும் வகைகளானெல்லாம் இடைவிடாதே அவை எய்துமிடத்தானெல்லாம் எஞ்சாது செய்தல்.

வகைகளாவன: மன மொழி மெய்களும், அறவினைக்கேற்ற துறைகளும். 'ஓவாதே' யெனவே, எவ்வளவு காலம் ஒருவர்க்கு

அறவினை செய்ய வியலுமோ அத்துணைக்காலமும் அறவினை செய்தல் வேண்டும் என்பது பெறப்பட்டது. செல்லும் வாயெனவே எய்து மிடத்திலுள்ள உயிர்களும் அடங்கின.

குறள் ருகூ. அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.

(இ - ள்.) அறத்தொடு பொருந்த வருவதே இன்பமாவது; அதனோடு பொருந்தாது வருவனவெல்லாம் துன்பத்தினிடத்த; அது வேயு மன்றிப் புகழு முடையவல்ல. இன்பம் - இம்மை மறுமை இன்பங்களும், வீடுபேறும்.

## எ - ஆம் அதிகாரம். புதல்வரைப்பெறுதல்

### முன்னுரை

ஆசிரியர் ஆறுவது அதிகாரம் பத்தாவது குறளில் மக்கட் பேறென்று ஏழாவததிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்திருப்ப தினாலும், ஏழாவததிகாரம் எ, கூ, கO, குறள்கள் தவிர, ஏனைய ஏழு குறள்களிலும் மக்கள் என்று பொதுப்படக் கூறுதலினாலும், இவ் வதிகார முதற்குறளில் மக்கட்பேறென்ற தோற்றுவாய்ச் சொற் றொடரையே வழங்கியிருத்தலானும், இவ்வதிகாரம் "புதல்வரைப் பெறுதல்" என்று குறிக்கப்பெறுவது ஆசிரியர் கருத்தன்று என்பது புலனாகும்.

குறள் சுகூ. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

'கேட்ட தாய்' என்னும் சொற்றொடருக்குப் பெண்ணியல்பான் தானாக அறியாமையிற், கேட்ட தாயென ஆசிரியர் பரிமேலழகர் விரிவுரை கூறியுள்ளார். அவ்வுரையினால் பெண்கள் கல்வியும் அறி வும் உடையரல்லர் என்றாவது அவையின்மையால் அவர் தாமாக அறியும் ஆற்றலிலர் என்றாவது கொள்வதற்கிடமில்லை. "பெண் ணியல்பு" என்றமையால் ஆசிரியர் பெண்களின் பொதுவான மன நிலைமையையும் சிறப்பாகத் தாய்மார்களின் மன நிலைமையையும் குறித்துள்ளார்.

தாய் தன் மகன்பால் வைத்த பேரன்பால் அவனியல்புக ளனைத் தையும் உள்ளவாறு காணுந் திறனுடையளல்லள். ஆகவே, அறிஞர் அவனைச் சான்றோன் எனக் கூறக் கேட்டபோது பேருவகை யடைவள் என்க.

குறள் அஎ. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

தன்னை நோக்கி வந்த விருந்து தன்னில்லின் புறத்ததாகத் தானே யுண்டல் சாவினை யடைந்ததோ டொக்கும். தானுண்பது சாவினைப் போக்கும் அமிர்தமேயெனினும் அதனைத் தானேயுண்ண விரும்புதல் முறைமையன்று எனவும் பொருள் கொள்ளலாம்.

குறள் அ௫. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.

விருந்தோம்பி மிச்சில் மிசைவான் புலம் வித்து மிடல்வேண்டுங் கொல்லோ என்று பொருள் முடிவு செய்தல் நன்று. மிசைவான் வேண்டும் என்று வினைமுடிவு செய்க. முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தானுண்பான் விருந்தினரை உண்பிக்குங் கடப்பாட்டினிற்குங்கால், அதற்கு வித்தன்றி வேறு பொருளில்லாத நிலைமையில், விருந்தினரை உண்பிக்க விரும்பாமல் தனது விளைபுலத்திற்கு வித்திடுதலை விரும்பான் என்பது பொருள்.

இவ்வுண்மை இளையான்குடிமாற நாயனர் புராணத்தில் விளங்குதல் காண்க. வித்தினை யட்டுண்ணுதல் வேளாளன் விரும்பாத தொன்று. விருந்தினரை உண்பிக்குங்கால் அவ்வித்தையும் அட்டு விருந்தினரை ஊட்டும் கடமையில் நிற்பார் விருந்தோம்பும் அறமுடையார்.

குறள் ௧௬௫. அறனுக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

அறனாக்கம் என்பதை உம்மைத் தொகையாகக் கொள்ளாது அறத்தினலாகிய ஆக்கம் என மூன்றும் வேற்றுமைத் தொகைப் பொருள் கொள்ளுதல் பொருத்த முடைத்து.

அறத்தினலாகிய ஆக்கம் என்பதில் இம்மை மறுமை வீட்டுச் செல்வங்கள் மூன்றும் அடங்கும்.

"சிறப்பீனும் செல்வமு மீனும் அறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு" என்ருராகலின்.

குறள் ௧௬௬. கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
..முண்பதூஉ மின்றிக் கெடும்.

இதில் சுற்றம் என்பதற்குச் சுற்றமொடு என மூன்றும் வேற்றுமைத் தொகையாகப் பொருள் கொள்ளல்வேண்டும்.
அழுக்கறுப்பான் எழுவாய். கெடும் பயனிலை. சுற்றம் எழுவாயன்று.

குறள் ௨0௨. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

தீயவே தீய பயத்தலால் என்று அரசன் சண்முகனார் பாடமாகக் கொண்டு,

தனக்கு இன்பம் பயத்தலைக் கருதிச் செய்யும் தீவினைகள் பின் அஃதொழித்துத் துன்பமே பயத்தலால், அத்தன்மையவாய தீவினைகள், சிலகால் நன்மையும் செய்யும் தீயினும் ஒருவனால் அஞ்சப்படும். வேள்விக்கும் அட்டிற்றொழில் செய்தற்கும் தீ உதவி நன்மைசெய்யுமாறு காண்க.

குறள் ௨௬௬. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு.

(இ - ள்.) தவஞ் செய்வாராவார் தங் கருமத்தை அறநூல்களில் விதித்தாங்கு செய்பவரே; அவரை யொழித்த ஏனையோர் ஆசையாகிய வலையுட்பட்டுத் தமக்குக் கேடுசெய்பவராவர்.

இக்குறளின் கருத்து: இல்லறத்தானும் தன் கடமையை அறநூல்களில் விதித்தாங்கு செய்யின் தவஞ்செய்தவனாவன் என்பதாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் திருத்துறையூர்ப் பதிகத்தில் "வேண்டிக் கொள்வேன் தவநெறியே" என்று நம்பிரானை வேண்டிக்கொண்ட காலத்துக் குறிக்கப்பட்டுள்ள தவநெறி இல்லறத்திற்குந் துறவறத்திற்கும் பொதுவாதல் காண்க. அரசன் சண்முகனார்

குறள் ௨௬அ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) ஒருவன், தன்னுயிரானது தானென்னும் தன் முனைப்பினின்று நீங்கப் பெற்றவனைப் பெறுதனவாகிய மன்னுயிர்களெல்லாம் தொழும்.

குறள் ௩௬௬. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ - ள்.) கற்றறிந்தார் தாமின்புறுவது கண்டு உலகின்புறக் காமுறுவர் என உரைநடை செய்து செம்பொருள் கொள்ளுதல் ஆசிரியர் கருத்துக்குப் பொருத்தமாகும்.

நூல்களைக் கற்றறிந்தவர் தாம் கற்றறிந்த கல்வியினாலே நுகரும் இன்பத்தை உலகிலுள்ள ஏனைய மக்களும் நுகரவேண்டு

மென்று விரும்புவர் என்பதே இதற்குச் செம்பொருள். "யான் பெற்ற வின்பம் பெறுக இவ்வையகம்" என்பது பண்டைத் தமிழர் குறிக்கோளாகும். அதனையே ஆசிரியர் இங்கு விதந்தோதினர் என்க.

குறன் சகo. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.

மக்களொடு விலங் கனையர்; இலங்குநூல் கற்றாரோடு ஏனை யவர் என்று கொண்டுகூட்டிப் பொருள்கொள்ளலும் ஆம்.

குறன் ருஎo. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

அது - கடுங்கோல். ஈண்டு ஆகுபெயராய்க் கடுங்கோ லரசனைக் குறிக்கிறது.

குறன் சுஉo. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

ஊழானது வலி முற்பிறப்பிற் செய்த முயற்சி வலியா னது. அம்முயற்சி வலியினும் இப்பிறப்பிலே செய்கிற முயற்சிவலி மிக்கிருப்பின் ஊழ்வலியைத் தாண்டலாம் என்பது கருத்து.

குறன் சூருரு. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(இ - ள்.) யான் செய்தது எத்தன்மைத்தென்று பின் றானே யிரங்கும் வினைகளை ஒருகாலும் செய்யாதொழிக; அன்றி ஒரு கால் மயங்கி அவற்றைச் செய்யுந் தன்மையனாயினனாயின், பின்னேனும் அத்தகைய காரியங்களைச் செய்யாதிருத்தல் நன்று.

ஒரு வினையைச் செய்யுமுன் அதனைப் பல்லாற்றானும் சூழ்ந்து, பின் தான் இரங்கும் வினைகளை யொழித்து நல்வினையைச் செய்தல் வேண்டும். கழிவிரக்கங்கொள்ளும் வினைகளை ஒருகாலும் செய்தல் கூடாது. அத்தகைய வினைகள் தன்க ணிகழாமல் குறிக்கொண்டு காத்தல்வேண்டு மென்பது கருத்து. யாதாமொரு குற்றஞ்செய்தா னொருவனை இனி மீண்டாயினும் செய்யற்க என்று கூறும் உலக முறையை யொட்டி ஆசிரியர் இங்ஙனம் நயம்பெற உரைத்தார்.

குறன் எ௩௬. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(இ - ள்.) நாடென்ப நாடா வளத்தன - பிறநாடுகளிலுள்ள வளத்தை நாடாது தன் நாட்டிற்கு வேண்டும் வளங்களை யெல்

லாம் தன்னகத்தே யுடையது நாடாகும்; இவ்வாறன்றி, நாடவளந் தரு நாடு நாடல்ல - பிறநாட்டு வளங்களை நாடி யடைதலால் வளம் படும் நாடு நாடல்ல.

ஒரு நாட்டு மக்களுக்கு வேண்டுவனவாகிய பொருள்களெல்லாம் அதனிடத்தில் அமைதல் வேண்டும் என்பது கருத்து.

குறள் ௯0௩. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ளுணுத் தரும்.

(இ-ள்.) தாழ்ந்த இயல்பின்மை-தாழ்தற்கு ஏதுவாய ஆணியல்பு இல்லாமை; அஃதாவது, ஆண்டகை யின்மை. ஆண்மக்களுக்கு ஆளுந்தன்மையாகிய ஆண்மை யியல்பாகலின், அதனை ஆசிரியர் இயல்பு என்றார். ஈண்டு உரையாசிரியர் இவ்வாண்மையின்மையை மனையாளிடத்து அச்சம் என்றார்.

குறள் ௯௭௭. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(இ - ள்.) சீரல்லவர்கண் - பெருமையுடையரல்லாத சிறியோரிடத்து, சிறப்பு படின் - செல்வம் கல்வி முதலிய சிறப்புகள் உளவாயின், இறப்பே புரிந்த தொழில் - (அச்சிறப்புகள் அவனுக்கு), செருக்கினை விரும்பும்படியாயுள்ள செயல்களைச் செய்விக்கும். தாம், தான் அசைகள்.

சிறப் பென்பது மக்கள் பலரிடத்தி லில்லாது சிலரிடத்தில் மட்டு மிருக்கும் செல்வம், கல்வி, அதிகாரம் முதலியன. இறப் பென்பது தன்னளவைக் கடந்திருத்தல்; அஃதாவது செருக்கு.

குறள் ௧0௭௧. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பாரி யாங்கண்ட தில்.

வடிவால் முழுதும் மக்களே போன்றிருப்பர் கயவர். ஆனால், அவருக்கு ஒப்பானவர் பிறரை யாம் கண்டதில்லை.

இதனால், கயவர் மிகக் கீழானவர் என்றும், அவருக்கும் கீழான வர் பிறரில்லை யென்றும் கூறப்பட்டது.

இவ்வுரை, சேர்மானியப் புலவர் சூப்னோர் (Schopenhaur) என்பவரால் தமது சமயம் என்னும் கட்டுரையில் கண்டது.

குறள் ௧௧0௩. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு.

தாம் விரும்பும் மகளிர் மெல்லிய தோளின்கட் டுயிலும் துயில் போல இனிமை பயப்பதோ செங்கண்மா லுலகம்?

# திருக்குறள்

## அருஞ்சொற் பொருளகராதி

[எண், குறள் எண்ணைக் குறிக்கும்]

அஃகாமை - சுருங்காமை ௧௭௮
அஃகி - நுண்ணிதாய் ௧௭௫
அகடு - வயிறு ௯௩௬
அகத்து - நடுவண் ௭௨௭
அகப்பட்டி - சுருங்கியபட்டி: அகமாகிய பட்டி ௧0௭௪
அகம் - மனம் ௭0௨
அகலல் - நீங்குதல் ௬௯௧
அகலாக்கடை - பெருகாதாயின் ௪௭௮
அகல் - அகன்ற ௨௫
அகறலின் - கூடப்பெறாத வெல்லைக்கண் ௧௩௨௫
அகற்றும் - விரிக்கும் ௩௭௨
அகனமர்ந்து - மனமகிழ்ந்து ௮௪
அகன்ற - சென்ற ௧௭௫
அகன்றார்-பெரியராயினார் ௧௭0
அசாவாமை - தளராமை ௬௧௧
அசையியற்கு - நுடங்கிய இயல்பினை யுடையாட்கு ௧0௯௮
அசைவிலா - தளராத ௫௯௪
அசைவு - மடி ௩௭௧
அஞர் - துயர் ௧0௮௬
அஞ்சுவது - அஞ்சிக் காப்பது ௩௬௬
அடக்கலாற்றின் - அடக்க வல்லனாயின் ௧௨௬
அடல் - வருத்துதல், கோறல் ௨0௬, ௮௯௩

அடற்றகை - அடும் தறுகண்மை ௭௬௮
அடியளந்தான் - தன்னடியளவானே எல்லா வுலகையு மளந்த இறைவன் ௬௧0
அடுக்கிய - தொடர்ந்த ௫௨௫
அடுங்கால் - துன்பஞ் செய்யுங்கால் ௧௧௬௬
அடுத்திருந்து - தொடங்கியிருந்து ௮௬௭
அடூத்து - பற்றுவன கொடுத்து ௧0௩0
அடுமுரண் - பகைவெல்லுதற் கேற்ற மாறுபாடு ௫௬௭
அடையாவாம்-சாராவாம் ௯௩௯
அட்டிய - வார்த்த ௧0௯௩
அணங்கு - தெய்வமகள் ௧0௮௧
அணியுமாம் - வியந்து புனையாநிற்பர் ௯௭௮
அணுகாது - செறிவதுஞ் செய்யாது ௬௯௧
அண்ணாத்தல் - அங்காத்தல் ௨௫௫
அதர்வினாய் - வழிவினவி ௫௯௪
அதிர - நடுங்க ௪௨௯
அமர்த்தல்-மாறுபடுதல் ௧0௮௪
அமர்ந்த - பொருந்திய ௭௫
அமர்ந்து - மனமகிழ்ந்து ௮௪
அமிழ்தற்று - அமிழ்தினையொக்கும் ௭௨0

ஆறுதொழிலோர் - அந்தணர் ௫௬௦

அறுப்பான்-கெடுப்பான் ௩௪௬

அறுவாய்-குறைந்தவிடம் ௧௧௧௭

அறைபோகாதாகி-(பகைவராற்) கீழறுக்கப்படாத தாய் ௭௬௯

அறைப்படுத்தும் - கீழறுத்துத் திறப்பித்தும் ௭௪௭

அற்கா - நில்லாத ௩௩௩

அற்குப - நிலையுள்ள ,,

அற்றம் - அவமானம், மெலிவு ௯௮௦, ௧௧௮௬

அற்றேம் - இலமாயினேம் ௮௮

அனைத்தானும் - அத்துணையாயினும் ௪௧௬

அன்பொரீஇ - அன்புசெய்தலையொழிந்து ௧௦௦௬

அன்னநீரார் - அப்பெற்றித்தாய இயல்பினையுடையீர் ௫௨௭

ஆகலூழ்-அதற்கேதுவாகிய ஊழ் ௩௭௨

ஆகாவாம் - நில்லாவாம் ௩௭௬

ஆகாறு - வருகின்ற நெறியளவு ௪௭௮

ஆகுலநீர-ஆரவார நீர்மைய ௯௪

ஆகூழ் - ஆதற்குக் காரணமாகிய ஊழ் ௩௭௧

ஆக்கல் - உயர்த்தல் ௨௬௯

ஆக்கிக்கொளல்-உளதாக்கிக் கோடல் ௧௦௨௬

ஆக்கிக்கோடல் - முடித்துக் கொள்க ௬௭௮

ஆக்கும் - வளர்க்கும் ௬௧௬

ஆங்கால் - விளையுங்கால். ௩௭௧

ஆசு - குற்றம் ௫௦௩

ஆடியற்று - ஆடினாற் போலும் ௪௦௧

ஆட்சி - பயன் கோடல் ௨௫௨

ஆண்மை - ஆளுந்தன்மை ௬௦௬

ஆயம் - வருவாய் ௯௩௩

ஆயிடை - அவ்விருவழியும் ௧௧௭௯

ஆர - நிறைய ௮௩௭

ஆரா-ஒருகாலும்நிரம்பாத ௩௭௦

ஆரார் - ஆரப்பெறார் ௯௩௬

ஆராவியற்கை - நிரம்பாதவியல்பு ௩௭௦

ஆருயிர் - பெறுதற்கரிய மக்களுயிர் ௭௩

ஆர்க்கும் - பிணிக்கும் ௪௮௨

ஆர்வம் - விருப்பம் ௭௪

ஆர்வலர் - அன்புசெய்யப் பட்டார் ௭௧

ஆள்வினை - முயற்சி ௬௩௨

ஆறு - நெறியாக ௧௬௧

ஆறு - பயன் ௩௭

ஆற்ற - மிக ௬௪

,, - தவர ௩௬௭

ஆற்றலது - ஆற்றலையுடையது ௭௬௫

ஆற்றறுக்கும் - களத்திடை வீழ்த்துப்போம் ௮௧௪

ஆற்றறுப்பார் - கைவிடுவார் ௭௯௮

ஆற்றுக்கடை - செய்யாவிடின் ௪௬௯

ஆற்றாதார் - ஆற்றலில்லாதார் ௮௬௪

ஆற்றாதான் - கொடாதான் ௧௦௦௭

ஆன்ற - நிரம்பிய ௧௪௮

,, - அமைந்த ௬௮௧

ஆன்று - நிறைந்து ௩௬௫

இகந்து - பிரிந்து ௧௧௩௦

இகலாவாம்-நீங்காவாம் ௧௪௯

இகழ்ச்சி - சோர்வு ௫௩௬

இசைபட - புகழுண்டாக ௨௩௫

இடிக்கும் - நெருங்கிச் சொல்லும் ௪௪௭

இடிபுரிந்து - கழறுதலை
  மிகச்செய்து கூ0எ
இடும்பை - பிறவித்துன்பங்,
  கள் ச
  ,, - துன்பம் கநஅ
இட்டிதாயினும் - சிறிதாயிற்
  றாயினும் சஎஅ
இணர் - கொத்து கூரு0
இமையார் - அமரர் கூ0கூ
இயலாள் - இயல்பின்
  கண்ணே நிற்பான் கசஎ
இயல்வது - இனிது நடப்
  பது எநச
இயற்றல்-தனக்குப்பொருள்
  வரும் வழிகளை மேன்மே
  லுளவாக்கல் ந அரு
இயன்றது - நடந்தது நரு
இயைந்தக்கால் - கூடியக்
  கால் ச அகூ
இயைபு - பொருத்தம் ருஎந
இயையாக்கடை - முடியாத
  வழி உகூ0
இரத்தக்கார்-இரத்தற் கேற்
  புடையார் க0ருக
இருந்தேமா - இருந்தே
  மாக கநகஉ
இருந்தோம்பி - இல்லின்க
  ணிருந்த பொருள்களைப்
  போற்றி அக
இருபுனல்-கீழ்நீர் மேனீர் எ௩எ
இருமனம்-கவர்த்தமனம் கூஉ0
இருவினை-நல்வினை தீவினை ரு
இருவேறு-இரண்டு கூறு நஎச
இலம் - வறியம் கஎச
இலர் - நல்கூர்வார் உஎ0
இலாக்கடை-இல்வழி ச0ருக
இல்லல்ல-(யாவர்க்கும் முன்
  ,,னே) அமைந்து கிடந்தன ககரு
இல்லாகியார்க்கு - இல்லை
  யாயினார்போல உசஎ

இல்லாகியார்-முற்காலத்துத்
  தாமுளராகியே இலராகி
  யொழுகினார் ககரு
இல்லாக்கால் - நல்கூர்ந்த
  வழி க0சுச
இல்லிலோர் - இல்லாளை
  இல்லாதோர் ருக
இவக்காண் - இங்கே
  யன்றே கக அரு
இவர்தந்து - மேல்
  கொண்டு ககஅஉ
இவறல்-வேண்டும்வழிப்
  பொருள் கொடாமை சநஉ
இவறன்மை-உலோபத்தினது
  தன்மை சநஅ
இவறி - விரும்பி க00ந
இவறியார்-கைவிடாதார் கநரு
இவறியான் - பற்றுள்ளஞ்
  செய்தான் சநஎ
இழத்தும்-இழப்பேம் கஉரு0
இழத்தொறூஉம் - இழக்குந்
  தோறும் கூச0
இழந்தவன் - (ஆடை) துலைந்த
  வன் எஅஅ
இழவூழ் - இழத்தற்கேது
  வாகிய ஊழ் நஎஉ
இழிந்த - தாழ்ந்த கநந
இழுக்கல் - வழுக்குதல் சகரு
இழுக்கம் - ஒழுக்கத்தில்
  தவறுதல் கநந
இழுக்காமை - மறவாமைக்
  குணம் ருநசா
இழுக்காறு - தீநெறி கசுச
இழைத்துணர்ந்து - நுண்ணி
  தாக வராராய்ந்தறிந்து சகஎ
இழைந்து - உண்
  ணெகிழ்ந்து ககஎஎ
இளி - இழிவு கூஎ0
இளித்தக்க - இளிவாகத்
  தக்க கஉஅஅ

இறந்தமைந்த - கழியப் பெரிய கூ௦ப
இறல் - இறுதி கஅ௦
இறன்முறை - இறத்தல் முறை அஅரு
இறும் - முறியும் சஎரு
இற்பிறந்தார் - குடிப்பிறந் தார் கூருக
இனமுறையர் - எமக்கின்ன முறையினை யுடையார் கககூஅ
இனைத்துணைத்து - இன்ன அளவிற்று அஎ
இனையர் - இத்துணை யன் பினர் எகூ௦
இன்கண் உடைத்து - இன்ப முடைத்தாயிருக்கும் ககருஉ
இன்சொலினது - இனிய சொற்களைச் சொல்லுத லின் கண்ணது கூடு
இன்புறூஉம்-இன்பத்தை மிகுவிக்கும் கூச
இன்மையா - இல்லாமை யாக அசக
இன்றுணையா - இனிய துணை யாக அஎரு
இன்னம்-இத்தன்மையம் எகூ
இன்னாச்சொல் - கடுஞ் சொல் நரு
ஈகலான் - இவறன்மாலை யன் அசு
ஈத்துவக்கும் - வறியார்க்கு வேண்டியவற்றைக் கொடுத்து அவர் உவத்த லான் உஉஅ
ஈந்தது - உபகரித்தது ககசஉ
ஈயப்படும்-இடப்படும் சகஉ
ஈரம் - அன்பு கூக
ஈர்ங்கண் - குளிர்ந்த இடம் கபருஅ
ஈர்ங்கை - உண்டு பூசிய கை க௦எஎ
ஈன்பது - பயப்பது கசுரு
உகாஅமை - உமிழாமை ருஅரு
உக்கக்கால் - இறந்துபட்ட வழி கஉஎ௦
உஞற்றிலவர் - முயற்சி இலராயினர் சு௦ச
உஞற்றுபவர்-முயல்வார் சுஉ௦
உடம்பாடு - மனப் பொருத்தம் அசு௦
உடற்றும் - வருத்தும் ககூ
உடற்றுபவர் - முடியாதாக்கிச் செய்யகதார் அகஅ
உடன்று - வெகுண்டு எசுரு
உடுக்கை - ஆடை எஅஅ
உடையேமா - உடையே மாக கஉரு௦
உட்கப்படாஅர் - அஞ்சப் படார் சுஉக
உணக்கின் - காயவிடுவ ஞயின் க௦டஎ
உணங்க-மெலியாநிற்க கநடக௦
உணரற்பாற்று - உணரும் பான்மையை யுடைத்து கக
உண்கண்-மையுண்டகண் கபகக
உண்டற்று - உண்டாற் போலும் ககபஎ
உண்ணற்க - உண்ணு தொழிக கூஉஉ
உண்பதூஉம் - உண்ணப் படுவதும் சுசு
உப்பக்கம் - புறம் சுஉ௦
உயிரச்சம் - உயிர்ப்பொருட் டான்வரும் அச்சம் ரு௦க
உயிர்த்து - மூக்கான் மோந்து கக௦க
உய்க்கிற்பின் - நுகரவல்ல ஞயின் சச௦
உய்வில் - உய்யமாட்டாமைக் கேதுவாய கசுஎச
உரம் - திண்ணிய அறிவு சு௦௦

ஒப்பாரி - ஒப்பு ௧௦௭௧
ஒரால் - நீக்குதல் ௧௫௩
ஒருவந்தம் - ஒரு தலையாக, நிலைபெற்ற ௫௬௩, ௫௯௩
ஒருவுக - விடுக ௮௦௦
ஒருவுதல் - ஒழிதல் ௬௫௨
ஒரூஉம் - ஒழியும் ௮௧௨
ஒல்காமை - தளராமை ௬௬௨
ஒல்கார் - சுருங்கார் ௧௩௬
ஒல்லாக்கால் - இயலாவிடத்து ௬௭௩
ஒல்லும் வாய் - இயலுமிடத்து ௬௭௩
ஒல்லை - கடிது ௫௬௩
ஒழியவிடல் - ஒழியவிடுக ௧௧௩
ஒழுகலாற்றார் - ஒழுகமாட்டார் ௨௮௬
ஒழுக்காறு - ஒழுக்கநெறியாக ௧௬௧
ஒளியார் - அறிவால் ஒள்ளியார் ௭௧௪
ஒள்ளமர்க்கண்ணாள் - ஒள்ளிய வாய் அமரைச் செய்யும் கண்ணையுடையாள் ௧௧௨௫
ஒள்ளியராதல் - தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்தல் ௭௧௪
ஒறுக்கிற்பவர் - எள்ளுதற்குரியார் ௭௭௯
ஒற்கம் - தளர்ச்சி ௪௧௪
ஒன்றல் - கூடுதல் ௮௮௬
ஒன்று - இணையின்றாக ௨௩௩
ஒன்றாக - தன்னோடிணைப்பதின்றித் தானேயாக ௩௨௩
ஒன்றாமை - பகைமை ௮௮௬
ஓச்சி - தொடங்கி ௫௬௨
ஓச்சும் - செலுத்தும் ௫௪௪
ஓட்டன்றோ - புறங்கொடுத்தலாம் ௭௭௫
ஓஒதல் - தவிர்தல் ௬௫௩
ஓத்து - வேதம் ௧௩௪
ஓம்பப்படும் - பாதுகாக்கப்படும் ௧௩௧
ஓம்பல் - செய்தல் ௪௩
ஓம்பி - போற்றி, மிசைவித்து ௮௧, ௮௫
ஓம்புவான் - புறந்தருவான் ௮௩
ஓரார் - கேளாது ௬௯௫
ஓர்த்து - ஆராய்ந்து ௩௫௭
ஓஒவினிதே - மிகவும் இனிதாயிற்று ௧௧௭௬
கசடற - பழுதற ௩௯௧
கடப்பாடு - ஒப்புரவு ௨௧௧
கடா - ஐயுறாத ௫௮௫
கடாஅக்களிறு - மதக்களிறு ௧௦௮௭
கடாம் - மதம் ,,
கடி - காவல் ௧௨௦௫
கடிதல் - ஒழித்தல் ௫௪௯
கடிதோச்சி - அளவிறப்பச் செய்வார்போற்றொடங்கி ௫௬௨
கடுகி - குறைந்து ௫௬௪
கடுத்தபின் - ஐயுற்றால், ௬௯௪
கடுத்தது - மிக்கது ௭௦௪
கடைப்பிடித்து - குறிக்கொண்டு ௯௪௪
கடைமுறை - முடிவில் ௭௯௨
கடையர் - இழிந்தார் ௩௯௫
கட்டபின் - களைகட்டால் ௧௦௩௮
கட்டளைக்கல் - உரைகல் ௫௦௫
கட்படாம் - முகபடாம் ௧௦௮௭
கணத்தர் - இனத்தர் ௭௨௦
கணிச்சி - கூந்தாலி ௧௨௫௧
கணை - அம்பு ௨௭௯
கண் சாய்பவர் - தம்மறிவு தளர்வார் ௯௨௭
கண்டற்று - உணர்ந்தாற் போலும் ௨௪௬
கண்ணஞ்சா - பாகர்க் கடங்கா ௫௦௦

காதன்மை-அன்புடைமை ருOஎ
காமக்கலன்-விரும்பியேறும்
மரக்கலம் சுOரு
காமுறுதல் - அவாவுதல் சOஉ
காமுறுவர் - விரும்புவர் ௩கக
காமுற்றற்று-அவாவினாற்
போலும் சOஉ
காம்பு - வேய் கஉஎஉ
காயார் - வெகுளார் கஉOஅ
காய்தி - காயாநின்றாய் கசசு
கார்றிவாண்மை-இருண்டவறி
வினையுடையராதல் உஅஎ
கால்வல் - கால் வலிய சகசு
காழ் - பரல் கககக
காழ்த்த விடத்தி - முதிர்ந்த
நிலைமைக்கண் அஎக
கிழமை - உரிமை எஅரு
கிளவா - சொல்லாத எகரு
கீழல்லார் - சிறியராகார் கஎ௩
கீழ்தல் - சிதைத்தல்,
விலக்கல் அOக
குடங்கர் - குடில் அகO
குடம்பை - முட்டை ௩௩அ
குடிமை - குலனுடைமை க௩௩
குடியாக - மேன்மேலுயரும்
நற்குடியாக சுOஉ
குடியோம்பல் - தளர்ந்த
குடிகளைப் பேணல் ௩க
குண நலம் - குணங்களா
னுய நலம் கஅஉ
குழாஅத்து-அவையின்கண் அசO
குழாத்தற்று - குழாம் வந்
தாற் போலும் ௩௩உ
குளவளா - குளப்பரப்பு ரு௨௩
குறுகுங்கால்-அணுகுமிடத்து ககOச
குறுகுதல் - நணுகுதல் அஉO
குறியெதிர்ப்பு - அளவு
குறித்து வாங்கி அவ்வாங்கிய
வாறே எதிர்கொடுப்பது உஉக
குன்றன்னார் - குன்றத்தை
யொக்கும் அருந்தவர் அகஅ
குன்றிக்கால் - குன்றின் கரு
குன்றுவர் - தாழ்வர் கசுச
கூத்தாட்டு - கூத்தாடுதல்
செய்கின்ற ௩௩உ
கூப்பி - குவித்து உகO
கூம்பும் பருவத்து - வினை
மேற்செல்லாதிருக்கும்
காலத்து சகO
கூழ் - சோறு சுச
கூழ்த்தாகி - உணவிற்றாய் எசரு
கூன்கையர் - வளைந்த கை
யினையுடையார் கOஎஎ
கேடல் - தவிர்ந்திருத்தல் சுகஉ
கொடாஅ - உரிமையுறாது அOக
கெடுங்காலை - கெடுங்
காலத்து எகக
கெடுநீரார் - இறக்குமியல்
பினை யுடையார் சுOரு
கெடுவல் - கெடக்
கடவேன் ககசு
கெழீஇ - செறிந்த அகசு
கெழுதகை - உரிமை அOச
கெழுதகைமை - உரிமை எOO
கேடில் - அழிவில்லாத சOO
கேண்மை - கேளாந்
தன்மை கOசு
கேண்மையவர் - நட்பினை
யுடையார் அOஎ
கேளாத்தகைய - செவிடாந்
தன்மைய சகஅ
கேளார் - பகையாய் ஏற்றுக்
கொள்ளாதார் கச௩
கைகூப்பி - கைகுவித்து உசுO
கைதுவேன் - கையொழி
யேன் கOஉக
கைம்மாறு - நிலைமாறுக ககஅ௩
கையறியா - செய்யு முறைமை
யறியாத அ௩சு
கையறியாமை - செய்வதறி
யாமை உருக

தேர்ந்துகொளல் - அருமை யையோர்ந்துகொள்க சசக
தேறப்படும் - தெளியப் படும் ருoக
தேறற்க - தெளியா தொழிக ருoகூ
தேறற்பாற்றன்று - தெளி தன் முறைமைத்தன்று அஉரு
தேறியார் - தெளிந்தார் க்கருச
தேற்றம் - செய்தற்கட் கலங் காமை ருகஙு
தேற்றுதல்-தெளிவித்தல் கூகஙு
தோகை - குழுவு எகக
தொடங்கற்க - தொடங்கா தொழிக சகூக
தொடலை - மாலை ககஙுரு
தொடலைக்குறுந்தொடி - மாலைபோலத் தொடர்ந்த சிறு வளைவினையுடை யாள் ககஙுரு
தொட்டனைத்து - தோண் டிய வளவிற்றாக ஙுகசு
தொல்லை - பழைமை அoசு
தொல்வரவும் - பழைய குடிவரவினையும் கoசஙு
தொழுதேத்தும் - தொழுது துதியாநிற்பர் கூஎo
தோட்கப்படாத - துளைக்கப் ப்டாத சகஅ
தோட்டார் - பூவினை யணிந்த ககoரு
தோயார் - தீண்டார் கூகச
தோற்றம் - உயர்ச்சி கஉச
நகல் - மகிழ்தல் அசo
நசை - ஆசை கoசஙு
நசைஇ - நச்சி கஉசுஙு
நசைஇயார் - நச்சப்பட்ட காதலர், கககூஙு
நடுக்கற்ற - துளக்கமற்ற சுருச
நடுவிகந்து - நடுவு நிற்றலை யொழிந்து கககூ
நணித்து - சிறிதுபொழுதன் உள்வாம் அருசு
நண்ணார் - பகைவர் கoஅஅ
நயத்தக்க-விரும்பத்தக்க ருஅo
நயப்பித்தார் - உடம்படும் வகை சொல்லியவர் ககஅகூ
நயம்-ஈரம், உவகை கூகஅ, ஙுகச,
நயவற்க - விரும்பாதொழிக சஙுகூ
நயனில - விருப்பமிலவாகிய செயல்; நீதியொடு படாத ககூஉ, ககூஎ
நயனுடையான் - ஒப்புரவு செய்வான் உககூ
நலக்குரியார் - எல்லா நன் மைகளும் எய்துதற்கு உரி யார் கசகூ
நல்லாறு-நல்லொழுக்கநெறி சக
நல்விருந்து-தக்க விருந்தினர் அச
நல்வினை - வீட்டிற் கேது வாகிய அறம் ஙுஙுரு
நவிறொறும் - கற்குந் தோறும் எஅஙு
நள்ளா - பொருந்தாது கூகஉ
நற்பாலவை - தூயவினையான் வந்த பொருள்கள் சுருகூ
நற்பொருள் - மெய்ந்நூற் பொருள் கoசசு
நனி - மிக சoஙு
நனைகவுள் - மதத்தா னனைந்த கபோலம் சுஎஅ
நன்றல்லது - தீமை கoஅ
நன்றறிவார் - தமக்குறுதி யாவன வறிவார் கoஎஙு
நன்றின்பால் - நல்லதன்கண் சஉஉ
நன்றாக்காது - அருளை நோக் காது உருஙு

மாணாக்கடை - அல்லாக் கால் ௫௩
மாணாத - ஏலாதன ௮௬௭
மாணார் - பகைவர் ௮௨௩
மாணிழை - மாண்ட இழையினையுடையாள் ௧௧௧௪
மாண்டற்கரிது - நன்றாத லில்லை ௧௭௭
மாண்பு - நற்குண நற் செய்கைகள் ௫௧
மாறல்ல - மாறுகொள் ளாத ௯௪௪
மாற்றலர் - பகைவர் ௭௪௯
மிகப்பட்டு - தான் மேம்பட் டுத் தன்மிகுதிகாட்டி ௯௭௪
மிக்கற்று - அளவின் மிக்காற்போலும் ௧௩௦௨
மிச்சில் - மிக்கது ௮௫
மீக்கூறும் - உயர்த்துக் கூறும் ௩௮௬
முகடி - சேட்டை ௬௧௭
முகனமர்ந்து - முகமினிய னாய் ௮௪
முதுவர் - தம்மின் மிக்கார் ௮௧௫
முந்துறும் - முற்பிட்டு நிற்கும் ௩௮௦
முயற்றின்மை - முயற்சி யில்லாமை ௬௧௬
முரண் - மாறுபாடு ௪௯௨
முரிந்து - இழந்து ௮௯௯
முறி - தளிர் ௧௧௧௩
மெய்வேல் - தன்மார்பின்க ணின்றவேல் ௭௭௪
மென்னீரள் - மெல்லிய வியற் கையையுடையள் ௧௧௧௧
மேவற்க - மேலிட்டுக் கொள்ளற்க ௮௭௭
மேற்கொளீஇ - மேற்கொள் ளப்பண்ணி ௯௩௮
மைந்து - வலி ௫௩௯
மையல் - மயங்குதல் ௮௩௮
மையாத்தி - மயங்காநின் றாய் ௧௧௧௨
மொய்ம்பினவர் - வலியினை யுடையார் ௪௯௨
யாக்க - செய்க ௭௯௩
யாங்கணும் - எவ்விடத் தும் ௮௬௪
யாண்டும் - எக்காலத்தும் ௪
வகுத்தான் - தெய்வம் ௩௭௭
வட்டாடியற்று - வட்டாடி னாற் போலும் (வட்டா டல்-உண்டை யுருட் டல்) ௪௦௧
வணங்கிய - பணிந்த ௪௧௯
வண்பயன் - வளப்பத்தை யுடைய விளையுள் ௨௩௯
வரிசையா - தத்தம் தகுதிக் கேற்ப ௫௨௮
வல்லரண் - அழியாதநகரி ௭௩௭
வல்லுருவம் - வலிவுடை யார் வேடம் ௨௭௩
வழங்காதெனின் - பெய் யாதெனின் ௧௯
வழுக்கி - மறந்து ௧௩௯
வழுத்தினான் - வாழ்த்தி னான் ௧௩௧௭
வளவரை - செல்வத்தி னெல்லை ௪௮௦
வள்ளி - கொடி ௧௩௦௪
வள்ளியம் - வண்மையுடை யேம் ௫௯௮
வறங்கூர்ந்தனையது - வறு மை மிக்காற் போல்வதோ ரியல்பினது ௧௦௧௦
வன்கணது - தறுகண்மை யையுடையது ௭௬௪
வன்கணவர் - அருளிலா தார் ௨௨௮
வன்பாட்டது - வலிமைப்பா டுடையது ௧௦௬௩

# திருக்குறள்

## பாட்டு முதற்குறிப்பகராதி

[எண் பக்கத்தைக் குறிக்கும்]

